

Vice President Dr. Shankar Dayal Sarma visits Tirumala and worships Lord Venkateswara before assuming his office






ஹ்ரீம் கூடத்ரய ரூபிணீம் ஸமயநீம்
　　ஸம்ஸாரிணீம் ஹம்ஸினீம்
வாமாசார பராயணீம் ஸுகுலஜாம்
　　பீஜாவதீம் முத்ரிணீம்
காமாக்ஷீம் கருணார்த்ர சித்த ஸஹிதாம் ஸ்ரீம்
　　ஸ்ரீம் திரிமூர்த்தியாத்மிகாம்
ஸ்ரீசக்ர பிந்து தர்ப்பணபராம்
　　ஸ்ரீராஜ ராஜேஸ்வரீம்.

ஹ்ரீம் என்ற அக்ஷரத்தை முடிவில் கொண்ட மூன்று கூடங்களையுடைய 'பஞ்சதசி' மந்திரஸ்வரூபியாகவும், ஸமயம் என்ற மானசீக பூஜையில் பிரியமாயும், உலகையே சம்சாரமாகக் கொண்டு ஹம்ஸ என்ற மந்திரத்தால் சொல்லப்படும் தாந்திரீக வழிகளால் ஆராதிக்கப்படுபவளும், கருணையால் நனைந்த உள்ளத்தைக்கொண்ட காமாக்ஷியாகவும், ஹ்ரீம் என்ற எழுத்தால் ஷோடசியாக விளங்கி மூன்று மூர்த்தியுமாகி ஸ்ரீ சக்ரத்தில் வழிபடுவதால் திருப்தி அடைபவளுமான "ஸ்ரீராஜ ராஜேஸ்வரி"யை வணங்குகிறேன்.

— ஆதிசங்கரர் (மந்த்ர மாத்ருகா ஸ்தவம்)

அக்டோபர் 1987

# ஸப்தகிரி

இதழ் 5 மலர் 18

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முனஅட்டையில ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி

2-வது : பாரதத்தின் புதிய துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர். சங்கர் தயாள் சர்மா அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்த போது.

3-வது காகினாடாவில் தி. தி தேவஸ்தானத்தின் புதிய திருமண மண்டபத்தினை ஆந்திர மாநில முதல்வர் திரு. என். டி. ராமா ராவ் அவர்கள் திறந்து வைத்தபோது.

பின்னட்டையில் : தீபத் திருநாள்.

சிறப்பாசிரியர் :
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

Sasi

# உங்களுடன் . . . .

ஒளியில்லையெனின் உலகில் உயிர் இல்லை. உயிர் உள்ள உடல் வாழவழி செய்யும அவ்வெங்கதிரோனின் கதிர் வீச்சு இவ்வையகத்தின் மூச்சாக விளங்குகிறது. இது உயிர்களின் புற வாழ்விற்கும், கண்ணில் தெரிந்து விண்ணில் மிதக்கும் அப்பரிதிக்கும் உள்ள உறவாகும். புற இருளை நீக்கிடும் அப்பரஞ்சோதியின் பின் இருந்து செயல்படும்—இவ்வுலகை இயக்கிடும் அப்பரம் பொருளை காண்பதெவ்வாறு? பகலில் தெரியும் அப்பகலவனின் ஒளியை இரவில் காண்பது எவ்வாறு? ஒளியேற்றி நம் வாழ்விற்கு ஒளி தந்திட வழி வகுத்தனர் நம் முன்னோர். ஆம் அகல் விளக்கேற்றி அதன் மூலம் ஆன்ம ஒளி ஒளிரச் செய்து அப்பரமனைக் கண்டிட முனைந்து தீப வழிபாடு ஏற்படுத்தினர்.

சூரியன், சந்திரன், அக்னி ஆகியன அவ்இயற்கை தந்திட்ட ஒளிச்சுடர்களாம். இம்மூன்றும் இல்லையெனின் இவ்வுலகமும் இல்லை. அக்னியைத் துதிக்கிறது வேதம். ஆதவனை ஆதிநாயகனின் பேரொளியாக பேசுகிறது காயத்ரி. 'அருட் பெருஞ்சோதி' என்று சிவனுர் ஏற்றப்படுகிறா. 'விடுவேனோ விளக்கை' என்று புலம்புகிறார் நம்மாழ்வார். 'மணி விளக்காக' மாதவனை கோதையார் விளிக்கின்றார். 'தீப மங்கள ஜோதி' என்று வேலவனை அருணகிரியார் இனங்காணுகிறார். 'ஞான தீபமாக ஐங்கரன் துதிக்கப்படுகிறார்.'காஞ்சிபுரி மணி தீபிகே' என்று அம்பிகையைத் தோத்தரிக்கிறார் மூக சங்கரர். 'நாதாசல தீப'மாக நாதனை நாவினால் தொழுகின்றார் தியாகராஜர். உயிரினை இயங்க வைக்கும் இந்த ஆன்ம ஒளியினைத்தான் பலவாறாகப் போற்றித் துதித்துள்ளனர் மெய்யடியார்களும், அவர்தம் பாடல்களும். இந்த ஞான தீபத்தின் பெருமையினைத்தான் 'தேஷாமே வானுகம் பார்த்த மஹமக்ஞானஜம் தம: | நாசயாம்யாத்ம பாவஸ்தோ ஞான தீபேன பாஸ்வதா:||'என்று பரமன் தன் இன்னமுதக் கீதையால் விளக்குகிறார்.இன்னின்ன நாட்களில்,எந்தெந்த மந்திரங்களின்மூலம், எந்தெந்த வேளைகளில், எந்தெந்த எண்ணெய் வகைகளைக் கொண்டு விளக்கேற்றிட வேண்டும், அதனால் என்னென்ன இம்மை மறுமைப் பயனகள் ஏற்படும் என்று வகைபடுத்தி விளக்கினை நம் வாழ்க்கையில் பெரும் பங்கினைப் பெற்றிடச் செய்த ஆன்றோர்களின் வாழ்க்கை நெறி, மனித நெறி மேம்படச் செய்யும் தெய்வ நெறியாக விளங்குகிறது. நாகரிகத்தின் முதல் சின்னமாக விளங்கி, முதல் இயற்கை வழிபாடாக அமைந்த அவ்விளக்கு வழிபாடு, பின்னர் ஆன்ம ஒளி ஏற்பட, அதன்மூலம் அம்முழு முதல்வனைக் கண்டு நம் பிறவிப் பயனைப் பெற வழி வகுத்தது.

இப்புண்ணிய மண்ணில் எந்நாளும் திருநாளே. எவ்விழாவும் மனித வாழ்க்கையினை உயர்த்திடுபவையே. இவற்றுள் ஐங்கரன் சதுர்த்தியைப் போல், ஏன் அதனைவிட நாடு முழுவதும் மட்டுமன்றிக் கடல் கடந்தும் கொண்டாடப் பெறும் விழாவாக விளங்குவது 'தீபாவளி'த் திருநாள். மாபெரும் தத்துவப் பின்னணியில் ஒளிர்விட்ட இத்திருவிழா இன்று தேசிய ஒருமைப்பாட்டுக்கு உதவிடும் ஒரு விழாவாக விளங்குகிறது. இட இன மொழி பாகுபாடின்றித் தத்தம் பொருளாதார சூழ்நிலைக் கேற்ப இவ்விழா கொண்டாடப்படுகிறது. துன்பத்தின் முடிவு இன்பம். அம்முடிவு முடிவுறும் வரை துன்பத்தின் தாக்கம் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும். நரகாசுரன் ஏதோ ஒரு கதைக்காக எழுப்பப்பட்ட ஒரு பாத்திரம் அல்ல. அந்த நரகாசுரன் இன்று நம்மிடையே, ஏன் நமக்குள்ளே நிலவும் அசுரப் பண்புகளின் ஒரு 'உதாரண புருஷனே' ஆவான். அசுரன் ஒருவனை அழிக்கவே அத்தேவனே நேரில் வரவேண்டியிருந்தபோது, இப்புண்ணிய பூமியில் பிறந்து, பின் பிறரரையும் அசுரர்களாக்கிடும் சில பல அசுர சக்திகளை அழிப்பது எவ்வாறு? அழிப்பது யார்? என்ற ஓர் அச்ச உணர்வு நம்மிடையே தோன்ற ஆரம்பித்துள்ளது. இதற்குக் காரணம் என்ன? மக்களிடையே இன்று மலிந்து விட்ட தன்னலப்பற்றும், பொறுப்பின்மையும், சோம்பலும், நேர்மையின்மையுமதான். நாட்டின் ஒரு பகுதியில் வெள்ளம் புரண்டோட, பூமி மூழ்கிட, சாலைகளில் மக்களுடன் வண்டிகள் மூழ்கிட, மற்றொரு பகுதியில் வறட்சி நலைவிரித்தாடிட, பூமி பிளந்திட, மக்களுக்காக வண்டிகள் நீர் கொண்டு சென்றிடும் விசித்திர-அவல நிலை இந்த உப கண்டத்தில் அவ்வப்போது காண நேரிடும் சாதாரண நிகழ்ச்சியாம். இவ்அவல நிலையிலிருந்து மனிதனைத் திருத்திடவே பண்டிகைகள் நமக்கு ஒரு நல் வாய்ப்பாக அமைந்துள்ளன. பண்டிகைகள் யாவும் உண்டு, களித்து உறங்கிட அல்ல என்பதைப் பலமுறை வலியுறுத்தியுள்ளோம். பண்டிகைகளின் பின்னணியில் இருக்கும் வாழ்க்கை உண்மைகளை எத்தனை பெற்றோர்கள் தம் குழந்தைகளுக்கு, எத்தனை ஆசிரியர்கள் தம் மாணுக்கர்களுக்கு எடுத்துக் கூறியுள்ளனர் என்பதைச் சற்றே சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். 'கடனாக பட்டாசு பெற அரசு வகை செய்யுமா அல்லது கடன் வாங்க பேறு வழி உள்ளதா' என்று கடன் வாங்குவதிலேயே பெரியோர்கள் எண்ணி செயல் புரிந்திடும் போது, அவர்கள் படும்பாட்டைப் பார்த்து குழந்தைகளும் 'கடன் பட்டாவது பண்டிகைகள் கொண்டாடுவது ஒரு நியதி போலும்' என்ற ஒரு மனப்பான்மையை சிறார்களிடையே தோற்றுவிக்கும் ஒரு பரிதாபகரமான நிலையில் நாம் உள்ளோம். பட்டாசு கொளுத்தி, பச்சிளம் முகத்தில் புன்னகையைத் தருவித்திடும் முன்னர், அப்பிஞ்சு உள்ளங்களில் பொது நலம், பொறுப்பு, நாட்டுப்பற்று, விழிப்புணர்வு, நேர்மை, தெய்வ நம்பிக்கை போன்ற நற்பண்புகளின் இன்றியமையாமையை உணர்த்தி, மனிதனை மனிதனாக விளங்கிடச் செய்யும் இந்துப் பண்டிகைகளில் முக்கியமாகக் கருதப்படும் தீபாவளி பற்றிய அப்பேருண்மையினை ஒளிர்விடச் செய்யும் நன்னாளே நம் பிறவியினை உயர்த்திடும் திருநாளாகும்.

# செய்திச் சுருக்கம்

**திருப்பதியில் :**

திருப்பதியில், தி. தி. தே. பொதுப் பணித்துறை அலுவலகக் கட்டிடத்தின் பின், சுமார் 18000 சதுர அடி நிலப்பரப்பில், 1200 நபர்கள் அமரும் வகையில் ரூ. 50 இலட்சம் செலவில், சமய, கலாசார நிகழ்ச்சிகள் நடை பெறும் வகையில் கலைஅரங்கு ஒன்று தி.தி. தேவஸ்தானத்தாரால் கட்டப் பட உள்ளது.

° °

திருப்பதியில் யாத்திரிகர்களின் வசதிக்காக மேலும் சில தி. தி. தே. தர்ம சத்திரங்கள் கட்டப்பட உள்ளன.

° ° °

திருப்பதி அருகே நரசிங்காபுரத்தில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் வேத பாடசாலையானது, சந்தரகிரி அருகே உள்ள கல்யாணி நீர்த் தேக்கத்தின் அருகே இட மாற்றஞ் செய்யப்பட்டுள்ளது. இதனால் இனிமேற்கொண்டு நரசிங்காபுரத்தில் தி. தி. தே. தர்ம பிராசார பரிஷத் செயல்படும்.

° ° °

திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயிலில் அண்மையில் ரூ. 200 செலுத்தி நடத்தப்படும் ஆர்ஜித கல்யாணுத்சவம் ஒன்றினை தி.தி.தே. மேலாண்மை புகுத்தியுள்ளது.

° ° °

காஞ்சி காமகோடி மடத்தைச் சார்ந்த தவத்திரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் 10-9-87 அன்று திருப்பதிக்கு வருகை புரிந்தார். அன்று மதியம் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயிலுக்குச் சென்று இறைவனைத் தரிசித்தார். பின்னர் அன்று இரவு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி பூலங்கி சேவையினைக் கண்டு களித்தார். பின் அடுத்த நாள் வெள்ளி அன்று கோயிலில் நடைபெற்ற அபிஷேக வைதீக சடங்குகளில் கலந்து கொண்டார். பின்னர் திருப்பதி ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயிலுக்கும் வருகை புரிந்தார். இக் கோயில்களில் ஸ்ரீ சுவாமிகளுக்கு கோயில் மரியாதைகள் வழங்கப்பட்டன. திருப்பதியில் ஸ்ரீ சுவாமிகள் ஸ்ரீ தியாகராஜ சுவாமி மண்டபத்தில் பக்தர்களுக்கு பிரஸாத விநியோகம் செய்தருளினர்.

° ° °

திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி சன்னதி வீதியிலிருக்கும் ஸ்ரீ பரகால மடத்தில் அண்மையில் மழைக்காக காலை முதல் மாலை வரை 108 முறை ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் மற்றும் ஸ்ரீ ஸூக்த பாராயணம் உள்ளூர் பண்டிதர்களாலும் கேந்த்ரிய ஸம்ஸ்க்ருத வித்யா பீட வித்யார்த்திகளாலும் சிறப்பாக நடைபெற்றது.

மாலையில் பாதூர்புராணம் ஸ்ரீ. உ. வே. ரங்கராஜாசார்ய ஸ்வாமி ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம பாராயண மகிமையைப் பற்றிச் சொற்பொழிவாற்றினர்.

பின்னர் திருமலை திருப்பதி தேவஸ்தான டாக்டர். திருமதி. உஷாதேவியவர்களால் ஸ்ரீமந் நிகமாந்த தேசிகனருளிய ஸ்ரீஸ்துதி புஸ்தகம் வெளியிடப்பட்டது.

குமாரி P. M. ராதாவின் இன்னிசையுடன் விழா இனிது நிறைவுற்றது. மேற்படி நிகழ்ச்சிகளின் முழுப் பொறுப்பும் உ. வே. N. S. V. ராகவாசார்யன் சுவாமிகளின் முயற்சியால் மேற்கொள்ளப்பட்டன.

**திருமலையில் :**

22-10-87 அன்று திருமலைக் கோயிலில் வருடாந்திர தீபாவளி ஆஸ்தானம் நடைபெற இருப்பதால் அன்று கோயிலில் கல்யாணோத்சவம், பிரம்மோத்சவம், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள், வசந்தோத்சவம், திருப்பாவாடை போன்ற ஆர்ஜித சேவைகள் நடைபெற மாட்டா.

° ° °

திருமலையில் உள்ள இலவச உணவு வழங்கிடும் அன்னதான கட்டிடத்தினை மேலும் விரிவுப்படுத்தும் வகையில், மேலும் மற்றொரு கட்டிடம் ரூ. 45 இலட்சம் செலவில் கட்டப்பட உள்ளது.

° ° °

அனைத்துலக விஷ்வ இந்து பரிஷத் பொதுச் செயலர் திரு. அஷோக் சின்ஹால்ஜி அவர்களின் தகவல்களின்படி, எதிர்வரும் ஜனவரி 9-ம் தேதி முதல் மூன்று நாட்களுக்குத் திருப்பதியில் வேதங்கள் மற்றும் நவீன விஞ்ஞானம் சம்பந்தப்பட்ட உரைக் கோவை மாநாடு ஒன்று நடைபெற உள்ளது.

திருமலையில் கோகர்ப்பம் நீர்த் தேக்கத்தின் அருகே உள்ள 25 ஏக்கர் நிலப்பரப்பில் பல வண்ண மலர்கள் அடங்கிய பூந்தோட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

° ° °

ரூ. 25/- செலுத்தி 'சிறப்பு நுழைவு' வழியாக இறைவனைத் தரிசிக்கச் செல்லும் யாத்திரிகர்களின் வசதிக்காக இரண்டாவது 'க்யூ' கட்டிடம் ஒன்று கட்டப்பட உள்ளது.

° ° °

இந்தியத் துணைக்குடியரசுத் தலைவராகப் புதியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாண்புமிகு டாக்டர். சங்கர் தயாள் சர்மா அவர்கள் திருமலைக்கு அண்மையில் வருகை புரிந்து, இறைவனைத் தரிசித்தார். அதற்கு முன்பு, கோயில் மரியாதைகளுடன் டாக்டர். சர்மா அவர்கள் திருமலையில் எதிர் கொள்ளப்பட்டார்.

° °

1985-86 ஆண்டில் 'ஸப்தகிரி' பத்திரிகைகளை அதிக அளவில் விற்பனை செய்த குண்ட்டூர் 'ஸப்தகிரி' தெலுங்கு பத்திரிகை விற்பனைப் பிரதிநிதியான திரு. வி. உமாசங்கர் அவர்களுக்கும், மற்றும் தமிழ் 'ஸப்தகிரி' விற்பனைப் பிரதிநிதியான சென்னையைச் சார்ந்த திரு. ஏ. டி. கிருஷ்ணன் அவர்களுக்கும் தலா 10 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கங்கள் வழங்க தி. தி. தே. முடிவு செய்துள்ளது. பாராட்டுப் பெற்றவர்களுக்கு ஸப்தகிரி வாசகர்கள் சார்பில் வாழ்த்துக்கள் பல தெரிவிக்கப்படுகின்றன.

° ° °

# திருவிரிஞ்சிபுரம்

இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றார். தூணிலும் துரும்பிலும் உள்ள இறைவனை இருந்த இடத்தினின்றே வழிபாடு செய்தல் கூடாதா என்ற கேள்வி கேட்பாரும் உளர். இறைவனை, கோவிலில் சென்றுதான் வழிபட வேண்டுமா என்றும் கேட்பர் இக் கேள்விக்கு விடை இருக்கத்தான் செய்கிறது. இறைவன் எங்கும் வியாபித்து இருக்கிறார். ஆயினும், ஆலயத்தில் திருவுருவத்தில் விளங்கித் தோன்றுகிறார். பசுவின் உடல் முழுவதும் பால் நிறைந்திருக்கிறது உண்மை. பசுவின் பாலை பெற விரும்புவோர் பசுவின் கொம்பையோ, காதுகளையோ, வாலையோ வருடினால் பால் கிடைக்குமா? பால் பெற விரும்புபவன் பசுவின் மடியை வருடி பால் பெறுதல் போல் இறைவனின் அருளைப் பெற விரும்புவோர் ஆலயம் சென்று இறைவன் திருமுன் நின்று வழிபட்டுத் திருவருளைப் பெறலாம். மக்களை மக்களாக இருக்கச் செய்வது ஆலயம். இறைவனை திருக்கோவிலிலே சென்று வழிபட்டால் நம் வினைகளாகிய பஞ்சு பொதிகள் இறைவன் திருவருளால் வெந்துச் சாம்பலாகும். இதை,

"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலங் கழீஇ அன்பரோடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத்
தொழுமே"

என்கிறது சிவஞான போதம்.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பர். கோயில் இல்லா ஊரில் குடி இருக்க வேண்டாம் என்றே அறிவுரை ஈந்தாள் ஔவைப்பாட்டி. பிறவியாகிய பெருங்கடலை நீந்த வேண்டுமாயின் இறைவன் திருவடியாகிய தெப்பத்தின் மூலமாகத்தான் நீந்திக் கரையேற முடியும் என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

எம். கலா பி.ஏ., — வேலூர்.

அத்தகு இறையோனாகிய சிவபெருமான் குடிக்கொண்டுள்ள சிவஸ்தலங்கள் ஆயிரத்தெட்டு என்றும், அவற்றுள் நூற்றெட்டு மேலானவை என்றும், அவற்றுள் பதினெட்டு விசேடமானவை என்றும், அவற்றுள் "திருவிரிஞ்சைப்பதி" (விரிஞ்சிபுரம்) மிக உன்னதமான சிவஸ்தலம் எனவும் கூறப்படுகிறது.

"மனமு மில்லைநான் மதியும் இல்லை
நான்
மற்றும் எண்ணமோ ஞானவம்
இல்லை
இனிய சுவையதோ நுகரும்
இன்பமோ
எந்தக் கேள்வியோ பார்வை இலை!
வனைந்த பூமியோ வளரும் தியுமோ
வான மோபிற காற்று மோஇலை!
எனைய றிந்தவன் ஞானம்! இன்பம்
நான்!
என்றும் நான் சிவம்! சிவமும்
என்னிலே"

என்று கூறுவதற்கொப்பத் துன்பமே நிறைந்த நம் வாழ்க்கைக்கு வழித்துணையாக விளங்கும் இறைவன் ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரர்-திருவிரிஞ்சி

எழில்மிகு இராஜகோபுரம் — திருவிரிஞ்சிபுரம்



சிம்மகுளம்

புரம் என்னும் புண்ணிய ஸ்தலத் திலே எழுந்தருளியுள்ளார். இக் கோவிலின் ஸ்ரீ மகா கும்பாபிஷேகம் அட்சய ஆண்டு மாசித் திங்கள் 27ம் நாள் வெகுச் சிறப்பாக நடந்தது.

மெய்ச்சிலிர்க்க வைக்கும் வகையில் பலவகையிலும் அதிசய உண்மைச் சம் பவங்கள் நடைபெற்று,வரலாற்றிலே தலை சிறந்து விளங்கும் இத் திரு தலத்தின் பெருமைகளைத் தலபுரா ணம் கூறும் வழி அறிந்து — ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரரை அடைந்து — பிறவிப் பயன் பெறுவது நம் தலை யாயக் கடமை.

சிவம் என்றால் மங்களம்; சிவகரம் என்றால் மங்களத்தைச் செய்வது. தன்னிடம் இருப்பதையே பிறர்க்கு அளிக்க முடியும். இதுதான் உண்மை. சம்பு என்ற ஒரு பெயர் சிவனுக்கு உண்டு. சம் என்றால் ஆனந்தம். மங்களம் என்றும் பொருள். சம்பு-தான் ஆனந்தனாக-மங்களகாரனாக-இருந்தபடி இருந்து நாம் உய்ந்துணர அருவும் உருவ மான சிவத்தை வழிபடும் முறையை ஷண்மதங்களில் ஒன்றாக நிறுவினர் மகா புருஷரான ஸ்ரீ சங்கரர்.

"பார்க்கு மிடமெங்குமொரு நீக்கமற நிறைந்து
நிற்கும் பரிபூரண நந்தமே"

எனப்படுகிறது. விறகு, கரி, குப்பை முதலியவற்றை எரித்து அப் பொருளுக்கு முடிவு கண்டால் இறுதியில் சாம்பல்தான் மிஞ்சும். அதுதான் பூரணம்.

அழியும் தன்மையுடைய உலகத் தில் எப்பொருளிலும் அழியாத தன் மையுடைய ஒரு பொருள் உண்டு என்பதைக் காட்டவே திருநீற்றைச் சின்னமாகக் கொண்டனர். சைவ சமயத்தார். அதனாலே அழியா தன் மையுடைய விபூதியை சின்னமாக இட்டனர் ஆன்றோர்.

கற்றாரும், கல்லாதாரும் நினைத்தா லும், பெயரைச் சொன்னாலும், சேர்ந் தாலும், உண்மைத் தவம் செய் தாலும் முக்தி தரும் சிறந்த இத் தலத்தைப் பற்றி அறிய வேண்டுவது அவசியமே. எந்நாட்டவரும் போற் றும் தென்னாடுடைய சிவபெரு மான் தமிழகத்தின் கண் தொண்டை நன்னாட்டில் பாலாற் றங்கரையில் உள்ள திருவிரிஞ்சிபுரம் என்ற இத்தலத்திலே சுயம்பு மூர்த்தி யாகி எழுந்தருளி நன்மார்க்கங்களைக் காட்டி வழித்துணை நாதராக வீற்றி ருந்து அருளாட்சி செய்கிறார்.

இவ்வாலயம் சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன் தமிழ் மன்னர் களால் கட்டப்பட்டதும், விஜயநகர பேரரசர் கிருஷ்ண தேவராயர் காலத்தில் விரிவுபடுத்தப்பட்டது மாகும். இத்திருக்கோயில் சுமார் 152 அடி உயரமுள்ள இராஜ கோபு ரத்தைக் கொண்டுள்ளது. பாலாற் றின் தென்கரையில் ஊருக்கு நடுவில் அழகிய தென்னை மரங்களுடன் கிழக்கு நோக்கிப் பாங்குற அமைந் துள்ளது.

ஊருக்கு வெகு தூரத்திலேயே செதுவாலையிலிருந்து போகும் வழி யிலே பச்சைப் பசேலென்ற வயல்களி டையே வானுற நிமிர்ந்து காண் போர் மனதை ஈர்க்கும் வண்ணம் காட்சியளிக்கும். சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது. கிழக்குக் கோபுர வாயில் வழியேதான் கோவி லுக்குப் போக வேண்டும். கீழ் கோபுர வாயில், மேல் கோபுர வாயில், திருமஞ்சன வாயில் என்று முறையே கிழக்கு, மேற்கு, வடக்கு புறங்களில் வாயில்கள் இருப்பினும் தென்புறம் மட்டும் வாயில் இல்லா மல் மதில் மேல் கோபுரம் மட்டுமே உள்ளது. நாள்தோறும் இராக் காலங்களில் தேவர்கள் வந்து எம் பிரானை பூஜை செய்துவிட்டுப் போவ தாகவும், அவ்வழி தேவர்க்காக ஏற் பட்டதாகவும், அதனால் மானிடர் யாரும் அப்பக்கம் செல்ல வழி ஏற் படுத்தபடவில்லை எனவும் ஐதீகமாகக் கூறுவர்.

கோயிலின் உள்ளே இருந்து வெளி மதில் வரை ஐந்து பிரகாரங்கள் உள்ளன. வெளிமதில் பிரகாரத் தில் பிரம்மனால் உண்டாக்கப்பட்ட பிரம்ம தீர்த்தமும், தீர்த்தக்கரை யில் பிரம்மபுரீஸ்வரர் ஆலயமும் தீர்த்தவாரி மண்டபமும் உள்ளன.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேயார்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

கிழக்கு வாயிற் கோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றதும் முன்னே இடப்பக்கம் சக்தியின் பல அவதாரங்களைச் சிற்பங்களாகத் தன்னிடத்தே கொண்ட நாற்கால மண்டபமான சக்தி மண்டபமெனும் விடயாற்றி மண்டபமும், அதை அடுத்து மேற்கே துவஜாரோகண மண்டபமெனும் பதினாறுகால் மண்டபமும் உள்ளன. அதற்குத் தெற்கில் சிங்கத்தின் வாய் வழியாக நுழைந்து செல்லும் முறையில் அமைந்துள்ள சிம்ம தீர்த்தம் உள்ளது. இத்தீர்த்தற்கு ஸ்ரீ கௌரி தீர்த்தம் என்பது பெயர். பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் தம்மைப் பீடித்துள்ள தீக்காற்று, நலி நீக்கமடையவும் புத்ர சந்தானம் வேண்டி நீராடி ஈரவஸ்தரமுடன் ஆலய சன்னதிமுன் படுத்துறங்கி, பரமன் அனுக்கிரகத்தினால் நற்சொப்பனங்கண்டு அடுத்த ஆண்டு வந்து தொட்டில் பிள்ளை ப்ரார்த்தனைச் செலுத்தி மெய்யானந்தம் அடைந்து வருவது இத்தலத்தின் தனிச் சிறப்பை மேலும் கூட்டி விடுகிறது. மேலும் சூலி தீர்த்தம், சோம தீர்த்தம் என்பவை விசேடமானவை. சோம தீர்த்தமான இஃது இரண்டாம் பிரகாரத்தில் உள்ள கிணறு. ஆலய மூர்த்திகள் அபிஷேகத்துக்காக ஏற்பட்ட இந்த தீர்த்தம் சந்த்ர பகவானால் உண்டாக்கப்பட்டது என்பர். ஈசனார் திருமுடி வளைத்த வரலாற்றுச் சிற்பங்களுடன் தென்மேற்கிலும் வடமேற்கிலும் இதர அபூர்வ சிற்பங்களுடன் கொண்ட திருக்கலியாண மண்டபங்களும் இவைகளுக்கு இடையே சிந்தூர கணபதி மற்றும் 1008 சிவலிங்க சந்நிதிகளும் உள்ளன. வடகிழக்கே ஸ்ரீ நடராசர் மூல உருவமும் கற்சிலையில் உள்ள நூற்றுக்கால் மண்டபமும் மிக விசேடமானவை.

பெரியகோபுர வாயிலுக்குப் பக்கத்தில் தெற்கு நோக்கி முருகன் கோயில் உள்ளது. ஸ்ரீ அருணகிரி நாதரும், வரகவி மார்கசகாய தேவரும் அருள் பெற்றுத் திருப்புகழும், பிள்ளைத்தமிழும் பாடியுள்ளனர் எனத் தலப்புராணம் கூறுகிறது.

### திருமுடி வளைந்த வரலாறு :

எம்பெருமானார்க்குச்சிவத்தொண்டு செய்யும் ஆதி சைவ தூய நன்மரபினரான குலவத்திரி மஹரிஷி கோத்திரத்தில் சிவநாதனெனும் சிவநேச அன்பனுக்கும், மங்கை நல்லாள் நயனா நந்தினி என்னும் உத்தமிக்கும் பாலகனாய் அவதரிக்கச் செய்தார் சிவசர்ம எனும் பாலகன். அப்பாலகனின் தந்தை சிவபதவி அடைய, திக்கற்ற பாலகனுக்கு . உபநயனம் சிவதீட்சை செய்து பர்த்தாவின் உரிமைப் பாகப்படி பூஜை செய்ய உதவுமாறு தன் தாயாதிகளை எவ்வளவோ வேண்டினாள். பாலகனின் தலைமை பூஜா உரிமைப் பாகத்தை அபகரிக்க எண்ணிய ஆதி சைவர்கள் அதனைச் செவி மடுத்தாரில்லை. மானிடர் யாவர் உதவியின்றிக் கண்களில் நீர் சோரப் பக்தியோடுத் தன் குறை தீர்க்கும்படி முறையிட்டாள் பாலகனின் தாய். அன்று கார்த்திகை. விரிச்சிகமதியின் கடை ஞாயிறு முதல் நாள் சனி இரவு தன் மைந்தன் பக்கமணைத்து பாயில் படுத்துறங்கவும் ஈஸ்வரன் அன்று இரவு அவள் கனவில் அவள் தந்தை போல் தோன்றி, 'சூரியன் தினமாம் நாளைய நன்னாளில் நம் மாலயப் பிரம்ம தீர்த்தத்தில் உன் மகனை மங்கள நீராட்டி வை. அதன்பின் நாம் காட்டுவோம் நன்னெறி' எனக் கூறி மறைந்தார்.

ஈசனாரின் ஆக்ஞைப்படி தாய் நயனா நந்தினி தன் மகனை நீராட்டக் குளத்தின் அருகே செல்ல, தாயாதியர் பலரும் தீட்சைப் பெறாத பாலகனாய் இன்று ஆலய பூசை செய்வது எவ்வாறு எனத் திருகோயிற் கதவினைப் பூட்டி நிற்க—தீர்த்தக் கரையில் பரமனார் ஒரு கிழவர் போல் வந்து பாலகனுக்கு உபநயனம், பிரம்மோபதேசம், சிவ தீட்சையாவும் அருள்பட, பாலகனுடன் கரையேறி மஹாலிங்கமாக மறைந்தார். திருக்குளத்தில் மூழ்கிய சிறுவன் சிவபூஜை செய்வதற்குரிய தீட்சைப் பெற்றவனாகக் கரையேறுதலைக் கண்ட யாவரும் வியப்படைந்தனர். கோவிலின் திருவாயிற் கதவுகள் தாமாகத் திறந்துகொண்டன. சிவசர்மனோ கற்றுணர்ந்தவன்போல் ஆகமப்படி அங்க சுத்தி ஆத்ம சுத்தி முதலான பஞ்ச சுத்தியாவும் முடித்து சுவர்ண கணபதியை ஆராதித்தப்பின் கையில் திருமஞ்சனக் குடத்துடன் பகவானுக்கு அபிஷேகம் செய்ய எத்தனிக்கையில் மஹாலிங்கம் உயரமாக இருந்ததால் திருமுடி எட்டவில்லை. அது கண்டு 'எந்தையே எனக்கு எட்டவில்லையே நும்முடி' என்று உருகி வருந்த பக்திக்கு இரங்கி, ஈசனார் தம் திருமுடியை வளைத்தார் இதை.

" அலை வளைத்திடும் புவியிடத்து டலுயிரனைத்தும்
தலை வளைந்தன வளைந்தன விமையவர் தருவுஞ்

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஒ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

சிலை வளைந்திடும் செயலெனத் திசை
திசை செறிந்த
மலை வளைத்தன வழித்துணையவர்
முடி வளைக்க என்றும்
கங்கைமாமதி குமுதுமென்றெலித்தி
டக் கடல்போற்
றிங்களானது கவிழ்ந்து சிற்ற
முதினைச் சிதற
வங்கைவார் சிலை நாரிபோற்
சூழ்ந்திட வரவ
மங்கையாளுடனுறைபவன் றிருமுடி
வளைத்தான்"

என்று தலப்புராணத்தில் சைவ எல்லப்ப நாவலர் கூறியுள்ளார். அதே கோலத்தில் இன்றும் முடிசாய்த்த மகாலிங்கமாக ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரர் காட்சி அளிக்கிறார்.

கார்த்திகைக் கடை ஞாயிறு விழா இரவு எம்பெருமான் பஞ்சமூர்த்திரிடப வாகனராய் சாவித்திரன் என்ற ஆர்ய வர்த்தன வாசிக்குக் காட்சிக் கொடுத்து, மானிடப் பிறவியுடன் ஒரு விமானத்தில் கைலைக்கு அழைத்துச் சென்ற கைலைக் காட்சியான மஹாமேரு உற்சவம் சிறப்புடன் நடைபெறுகிறது. இங்குள்ள விநாயகரைப் புகழ்ந்து,

மலையேற்று நிறை புரந்தோ னயின்
பரவும் வழித்
துணைவர் மகிழுஞ் சேயைக்
கலையேற்று மடமயிலு மலர்க்குயிலுந்
தொழ
முமையாள் களிக்கும் வாழ்வை
விலையேற்றம் படைத்தமணி வெயில்
விரிக்கு
மெயில்புடை சூழ் விரிஞ்சை மேவு
மலையேற்ற மதக்களிற்று முகத்
தவனை யடி
வணங்கி யன் புகூர்வாம்

எனத் திருவிரிஞ்சைப் புராணம் செப்புகிறது.

எனவே இந்த சிவஸ்தலம் மிக்க பெருமை வாய்ந்த ஸ்தலம் என்பது யாவரும் அறிந்த உண்மை. ஆயினும் இத் தலப்புராணம் நமக்குப்பல வகையில் உய்ய வழிகாட்டியாக உள்ளது. மேலும் பல உண்மையான நிகழ்ச்சிகள் கொண்ட சிவஸ்தலங்கள் பல உள்ளன. அவைகளை உள்ளபடி அறிந்து, அடைந்து வழிபடுதல் நம் வாழ்வின் ஒரு கடமை எனக் கருதுவோமாக.



# ஜெய ஜெய தேவி! துர்க்கா தேவி!!

பெண்மைக்கும் சரிநிகர்ச் சமானம் அளிக்கப்பட வேண்டும் என்ற உரிமைக் குரல் இன்று உலகெங்கிலும் எதிரொலிப்பதைக் கேட்கிறோம். புரட்சிக் கவிஞன் பாரதி கூடத் தன் பாடல் ஒன்றில் 'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோமடா' என்பான். இவ்வாறு பெண்மைக்கு உரிமை வேண்டி நிற்கும் இவ்வுலகில் நமக்கு முன்னே வாழ்ந்த நம் முன்னோர்கள் பெண்மையின் பெருமையை அறிந்திருந்ததோடன்றித் தகுந்த சிறப்பினையும் அளித்து அணி செய்து வாழ்ந்ததை இலக்கியங்கள் மூலமாகவும், பிற ஆதாரங்கள் வாயிலாகவும் நாம் அறிகிறோம். தமிழ் மறை தந்த திருவள்ளுவர்,

'' பெண்ணின் பெருந்தக்க யாவுள
கற்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்''

என்று புகழ்ந்துரைப்பார். சங்கம் வைத்து தமிழ் வளர்த்த புலவர் பெருமக்களில் பெண்பாற் புலவர்களும் இருந்ததை இலக்கிய ஏடுகளில் காண்கிறோம். இவ்வாறு வாழ்வியலில் ஆணும், பெண்ணும் சரி நிகர்ச் சமானம் என்றே வாழ்ந்தனர் நம் முன்னோர்கள். அத்தோடன்றி வாழ்விற்கு நலம் சேர்க்கும் தெய்வங்களிலும் பெண்பாற் தெய்வங்களை அவர்கள் சிறப்புடன் வழிபட்டு விழா எடுத்துக் கொண்டாடி மகிழ்ந்தனர். அவ்வாறு அவர்கள் கொண்டாடிய பெண் தெய்வ வழிபாடுகளில் ஒன்றே 'துர்க்காதேவி வழிபாடு' என்பதாம்.

துர்க்கை, பிறவாயாக்கைப் பெரியோன் என்ற பெருமையை உடைய சிவனின் மனைவியாகிய சக்தியின் வடிவமே. பார்வதிதேவி துர்க்கை வடிவம் எடுத்ததற்கான காரணம் பலரும் அறியாத ஒன்று. 'துர்க்' என்னும் அசுரனை அழித்தமையால் தேவியை துர்க்கை என்னும் பெயரால் அழைக்கின்றோம். பழம்பெரும் புராணங்களான மார்கண்டேய புராணம், வாமன புராணம் ஆகியவற்றில் துர்க்கையின் அவதாரம் பேசப்பட்டுள்ளது. இந்தியா வெங்கிலும் துர்க்கைக்குப் பலப்பல கோயில்கள் உண்டு. அவைகளே இந்துக்கள் துர்க்கையின்மீது கொண்டிருக்கும் நம்பிக்கைக்கு கட்டியம் கூறுபவையாகும். மேற்கு வங்கத்தில் துர்க்கை வழிபாடு மிகக் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. துர்க்கை சைவர்களால் வணங்கப்பட்ட தெய்வமாயினும், வைணவர்கள் அதை இலக்குமியின் அவதாரம் என்று கொண்டு வழிபட்டனர். எனவேதான் இன்றும் வைணவர்களிடையே துர்க்கை வழிபாட்டைக் காண்கிறோம்.

துர்க்கையின் தோற்றத்தையும், பெருமையையும் மார்கண்டேய புராணம் நயம்படக் கூறுகிறது. ருரு எனும் அரக்கனின் மகனாகத் தோன்றியவன் துர்க் என்னும் அரக்கன். அவன் தனது தவ வலிமையால் பிரம்மனின் அருள் பெற்று மூவுலகிற்கும் தலைவனாக ஆனான். மூவுலகிலும் அவனது கொடூரங்கள் நாளுக்கு நாள் அதிகரித்தன. மிகத் துன்பமடைந்த தேவர்கள் தங்களைக் காத்திட வேண்டி சிவனிடம் தஞ்சம் புகுந்தனர். சிவன் பார்வதியிடம் கூற, சக்தியின் சொரூபமான தேவி ஆயிரம் தோளுடையவளாய் ஆயுதம் ஏந்தி அரக்கனை வீழ்த்தச் சென்றாள். அவள் தனது ஒரே அம்பால் அரக்கனைக் கொன்று வெற்றி மாலை சூடினாள். அன்று முதல் துர்க்காதேவி எனவும் அழைக்கப்படலானாள்.

தவசீலன் என்ற புகழினை உடைய இராமபிரான் சக்தி வழிபாடு நடத்தியதை இராமகாதையின் மூலம் நாம் அறிகிறோம். சீதையை இராவணன் அபகரித்துச் சென்று விடுகிறான். இதனால் பெருந்துன்பமுற்ற இராமன் அனுமன் வாயிலாக சீதை இருக்கும் இடத்தை அறிகிறார். அன்புச் சகோதரன் இலக்குவனுடனும், சொல்லின் செல்வன் அனுமனுடனும் சீதையை மீட்க இலங்கையை நோக்கிச் செல்கிறார். வழியில் பெருங்கடல் தடையாக உள்ளதை எண்ணி வருத்தமுறுகிறார். ஆனால் இலக்குவனே சக்தி வழிபாடு நடத்தினால் நல்வழி கிடைக்கும் என்று யோசனை நல்குகிறான்.

---

திரு. கே. இராமநாதன், பி.ஏ.,
சேலம்.

---

சக்தி வழிபாடு நடத்துவதற்கு ஆயிரம் தாமரை மலர்கள் தேவைப்படுகின்றன. அவற்றை அனுமன் பலகாத தூரம் கடந்து சென்று கொண்டு வருகிறான். மலையை தேவியின் வடிவாகவும், அலைகடலை அவளது வாகனமான சிங்கமாகவும் கொண்டு இராமபிரான் ஒவ்வொரு மலராக அர்ப்பணிக்கின்றார். இராமனின் பக்தியை சோதித்திட எண்ணிய தேவி ஆயிரம் மலர்களில் இறுதி மலரை ஒளித்து வைத்துவிடுகின்றாள். இமைகளை மூடி தியானத்தில் ஆழ்ந்திருக்கும் இராமபிரான் ஒரு மலர் குறைவது கண்டு திடுக்கிடுகிறார். உள்ளம் தடுமாறுகிறது. திடீரென அவரது உள்ளத்தில் ஒரு எண்ணம் பளிச்சிடுகிறது. தாமரைக் கண்கள் என்று பிறரால் புகழப்பட்ட தனது கண்களில் ஒன்றை தோண்டியெடுத்து தேவிக்கு அர்ப்பணிக்கத் துணிகிறார். அதற்குள் தேவி அவரைத் தடுத்து வேண்டும் வரத்தினை தந்தருள்கிறாள்.

துர்க்கை வழிபாடு குறித்து புராணச் செய்திகள் மட்டுமல்லாது,

பழம்பெரும் தமிழிலக்கியங்கள் வாயிலாகவும் ஆதாரங்கள் கிடைத்துள்ளன. தமிழின் முதன்மை நூல் என்ற பெருமையை உடைய தொல்காப்பியத்திலும், மாணிக்க வாசகப் பெருமானுல் இயற்றப்பட்ட நெஞ்சை உருக்கும் திருவாசகத்திலும் துர்க்கையின் பெருமை பேசப்பட்டுள்ளது. பரணி நூல்களில், காளி வழிபாடு குறித்துச் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது.

துர்க்கை வழிபாட்டில் முதன்மை பெற்று விளங்குவது மேற்கு வங்கம். அதன் தலைநகரம் கல்கத்தா ஆகும். ஆனுல் இந்நகரின் பழைய பெயர் காளி கட்டா ஆகும். காளியின் இருப்பிடம் என்பது இதன் பொருள். பெயருக்கு ஏற்ருர் போலவே இங்கு மிகப் பெரிய காளிதேவியின் கோயில் ஒன்று உள்ளது. இவ்வாறு தேவியின் பெயரால் அமைந்த நகரம் நாளடைவில் மருவி கல்கத்தா என்று ஆகி விட்டது.

இந்துக்களால் பாரதமெங்கும் துர்க்கை வழிபாடு நெடுங்காலந் தொட்டே கொண்டாடப்பட்டு வருவதை நாம் அறிகிருேம். துர்க்கையை வணங்கிஞல் தீவினைகள் நீங்கி நல்வினை சேரும் என்பதில் அசையா நம்பிக்கையுடன் விளங்கும் நிலையைக் காண்கிருேம். எனவே தான் பொறியை விஞ்சி நிற்கும் தேவியை பாரதியார்,

"யாதுமாகி நின்ருய்-காளி! எங்கும் நீ நிறைந்தாய்
தீது நன்மையெல்லாம்-காளி! தெய்வ லீலையன்ருே?"

என்று ஆனந்தக் கூத்தாடுவதைக் காணலாம்.



---

# வேங்கடத்தில் உறைபவனே வந்தருள்க!

கவிஞர் வி. மு. உலகநாதன் — சென்னை.

மனத்தாலும் வாக்காலும் உடம்பி ஞலும்
வருந்துன்பம் அனைத்தையுமே களைவாய், என்றன்
சினமழியப் பொறுமையினை அருள்வாய், பெற்ற
சிந்தையிலே ஒளிசெய்வாய், அன்பு கொண்டு
வினையாற்றி நிற்கவைப்பாய், எளிய வர்க்கு
மிகவிழைந்து கொடுத்தருளச் செய்வாய், என்றும்
உனைப்பாடி இலங்கவைப்பாய், வேங்க டத்தில்
உறைபவனே போற்றுகின்றேன் அருள்க வந்து!

நோயின்றி என்னுடம்பை இலங்க வைப்பாய்
நோற்றுநிதம் உனைப்பாடித் துதிக்கச் செய்வாய்
வாயுரையில் மெய்யுணர்வே தோன்ற வைப்பாய்
மதிப்பவர்க்கும் அன்பருக்கும் ஆள னாக்கி
ஆய்வுசெயும் நூலெல்லாம் உன்பேர் சொல்லி
அறிவிக்கும் வகையாக்கி யான்ப டைக்க
தாய்போன்று நலஞ்செய்யும் வேங்க டத்தில்
சார்ந்துநிற்போய் அன்புடனே அருள்க வந்து!

சிறுமைதனை விரட்டுகின்ற உன்நா மத்தைத்
தினம்சொல்லிப் புகழாமல் சுயந லத்தால்
அறுவகையாம் தொழில்செய்தே அதனுல் காணும்
அனைத்தையுமே துய்ப்பவர்கள் என்ன காண்பார்?
பொறுப்புணர்ந்து நடவாதார் தீயோர் தம்மைப்
புரிந்துகொள்ள செய்வதற்கு நீயெ னக்கே
மறுவில்லா அறிவதனை, வேங்க டத்தில்
வாழ்பவனே கொடுத்தினிதே அருள்க வந்து!

ஆறுதலை அளிப்பவனே உன்னு டைய
அருட்பெயரில் நான்மறையின் பொருளை வைத்தாய்
கூறுபட அரக்கரினைக் கொன்ருய் அந்நாள்
குடமெடுத்து நர்த்தனமே புரிந்தாய் நாளும்
ஊறுசெய்த கொடியவரைக் காய்ந்தாய் போற்றி
உன்னைப்பாடும் அடியவர்பால் சார்ந்தாய் என்றும்
வேறுபாடே இல்லாமல் வேங்க டத்தில்
விளங்கிநிற்கும் பெருமானே அருள்க வந்து!

வடிவழகில் மிகச்சிறந்தோய் ஆய்ச்சி யர்பால்
மகிழ்ந்தாடி இலங்கிடுவாய் அடியார் தம்மைப்
படிமிசைமேல் தெரியவைப்பாய் ஆழ்வார் கள்தம்
பாடல்களில் களிநடமே புரிவாய் அந்நாள்
துடித்தழுத பாஞ்சாலி துயரம் தீர்த்தாய்
துருவன்முன் அருள்சொரிந்தாய் உன்னு டைய
அடிகளையான் பரவுகின்றேன் வேங்க டத்தில்
அழகுசெய்யும் பெருமாயா அருள்க வந்து!

சித்தத்தை ஒருநெறியில் வைத்தி டாமல்
சீர்குலைக்கும் ஆசையினுல் திரிவோர் சேர்த்த
சொத்துகளை மலைபோலக் குவிப்போர் கெட்ட
சுகபோகும் காண்பதற்கே அலைவோர் ஓர்நாள்
செத்தொழிந்தால் என்னதான் காண்பார் அந்தத்
தீயவர்கள் திருந்துதற்கு நீயெ னக்குச்
சத்வநெறி காட்டிடவே வேங்க டத்தில்
தண்ணெளியாய் நிற்பவனே அருள்க வந்து!

# சரம பர்வ நிஷ்டை

திரு.கே. பிச்சுமணி அய்யங்கார்-ஸ்ரீரங்கம்

இறைவனைப் பற்றிக் கூறும் பல மதங்களிலும் ஒரு கருத்தில் ஒற்றுமை யிருப்பதை 'ஸ்ரீவசந பூஷணம்' என்ற நூல் வெளிப்படுத்தியுள்ளது. இந் நூல் மணவாள மாமுனிகளுக்கும் ஆசார்யரான பிள்ளை லோகாசார்யர் இயற்றியதாகும். "வணங்கும் துறைகள் பலபல" இருந்தாலும் அத்துறைகளை நமக்கு எடுத்துக் காட்டிய ஆசார்யனை வழிபடுவதில் பெருமை யுள்ளது.

"ஸ்ரீவசந பூஷணம்" என்று தமிழில் அமைந்த இந்நூலை "திவ்விய சாஸ்திரம்" என வைணவர்கள் போற்றுகின்றனர். நான்கு வேதங்களையும் தமிழில் ஆக்கி நமக்கு அளித்தவர் நம்மாழ்வார். இருக்வேதத்தின் ஸாரத்தை "திருவிருத்தம்" வாயிலாகவும், யஜுர் வேதத்தின் ஸாரத்தை "திருவாசிரியம்" வாயிலாகவும், ஸாமவேதத்தின் ஸாரத்தை "திருவாய் மொழி" வாயிலாகவும், அதர்வ வேதத்தின் ஸாரத்தை "பெரிய திருவந்தாதி" வாயிலாகவும் அவர் வெளிப்படுத்தினர். வேதத்திற்கு சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என ஆறு அங்கங்கள் உள்ளன. அதே போன்று நம்மாழ்வார் பணித்த நால் வேதங்களுக்கும் ஆறு அங்கங்களாக ஆறு நூல்களைத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்திருக்கிறார். பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற அந்த ஆறு நூல்களையும் வைணவர் சிரமேல் வைத்துப் போற்றுவர்.

வடமொழியிலுள்ள வேதங்களும், வேதாங்கங்களும் செந்திறத்த தமிழில் வெளிவந்து விட்டாலும், வடமொழியிலுள்ள சிறந்த சாஸ்திரங்களின் நுண்பொருட்களையும் தமிழில் கொண்டு வர வேண்டுமென பல வைணவப் பெரியார்கள் பாடுபட்டனர். அவர்களில் தலை சிறந்தவரே பிள்ளை லோகாசாரியர் என்ற 'லோகாசார்யர்' அவர். தனது முன்னோர்கள் அருளிச் செய்த வசநங்களின் அடிப்படையில் ஸூத்ரங்கள் போன்று 463 வசநங்கள் இந்நூலில் காணப்படுகின்றன.

"வேதார்த்த மறுதியிடுவது ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே" என்பது முதல் வசநம். "இது ப்ரதமம் ஸ்வரூபத்தைப் பல்லவிதமாக்கும்; பின்பு புஷ்பிதமாக்கும்; அநந்தரம் பலபர்யந்தமாக்கும்" என்பது கடைசியில் 463-ஆவது வசநம். இந்நூலில் காணப்படும் எல்லா வசநங்களுக்கும் எளிய தமிழ் நடையில் மணவாள மாமுனிகள் உரை இயற்றியுள்ளார். இந்நூலில் உள்ள வசநங்களின் கருத்தை இப்பாட்டாலும் உணரலாம்:

"திருமாமகள்தன் சீரருளேற்றமுந்
திருமால் திருவடி சேர்வழி
நன்மையும்
அவ்வழியொழிந்தன வனைத்தின்
புன்மையும் மெய்வழியூன்றிய
மிக்கோர் பெருமையும்
ஆரணம் வல்லவ ரமருநன்னெறியை
யும் நாரணன்றுள்தரு நற்குரு
நீதியும்
சோதி வானருள் தூயமாகுருவின்
பாதமாமலர் பணிபவர் தன்மையும்
தீதில்வானவர் தேவனுயிர்களை யேது
மின்றி யெடுக்கும் படியையும்
மன்னியவின்பமு மாகதியுங்குரு
வென்னு நிலைபெறு மின்பொருள்
தன்னையும்
அசைவிலாவேத மதனுளனைத்தையும்
வசனபூடண வழியாலருளிய
மறையவர் சிகாமணி வண்புகழ்
முடும்பையிறையவன் எங்கோனே
ருலகாரியன்
தேன்மலர்ச் சேவடி சிந்தை செய்பவர்
மாநிலத்தின்பம் அதெய்தி
வாழ்வரே."

இக்கட்டுரையின் ஆரம்பத்தில் கூறியபடி, மேற்கூறிய பாட்டின் ஆறும் அடியில் கூறப்பட்டுள்ள 'மன்னிய இன்பமும், மாகதியும், குரு என்னும் நிலைபெறும் இன்பொருள்' தான் சரம பர்வ நிஷ்டையாகும். சரமம் என்றால் இறுதி, பர்வம் என்றால் படி, நிஷ்டை என்றால் ஊன்றியிருத்தல் அதாவது நிலையாக இருத்தல். உலகின்கண் பல்வேறு அறங்கள் உள்ளன, பல்வேறு குருக்கள் உள்ளனர். பல்வேறு தெய்வங்கள் உள்ளன. ஆனால் தம்தம் முன்னோர் மொழிந்த முறை தப்பாமற் கேட்டுத் தமது குரு காட்டிய வழி நிற்றலே சரம பர்வ நிஷ்டையாகும்.

கர்மம், ஞானம், பக்தி, பிரபத்தி என்ற பல வழிகள் நமது மதத்தில் உள்ளன. ஆனால் நமது ஆசாரியன் கூறும் வழியையே பின்பற்றுவது நமக்கு நன்மை பயக்கும். 'ஆசார்யவாந் புருஷோ வேத' என்று வேதம் கூறுகிறது. கண்ணனும் தன்னை 'கீதாசார்யன்' என்று பிறர் கூறுவதில் பெருமை கொள்கிறான். ஆசாரியன் நடமாடும் தெய்வம். கையில் வெண்ணை வைத்துக் கொண்டு நெய் வாங்க அலையக் கூடாது. ஆசாரியன் அருள் இருந்தால் அவனருள் தானே கிடைக்கும். 'நம்மாழ்வாரையே' தெய்வமென்று கருதி 'தேவு மற்றறியேன்' என்று மதுரகவியாழ்வார் இயற்றிய 'கண்ணிநுண்

# பரமபதத்துக்கு ஒரு பரிந்துரை!

ஸ்ரீ யதிராஜர் திருமலை திருத்தலத்தில் இருந்த சமயம் ஒரு நாள் தயிர் விற்கும் மூதாட்டி அவரைக் கண்டு ஆவலுடன் விரைந்து அடி பணிந்து நின்றாள். அவருடன் இருந்த ஸ்ரீ வைஷ்ணவதாசர்களுக்குத் தயிர் முழுவதும் வாரி வழங்கினாள்.

"தக்க நேரத்தில் தயிர் அளித்து எங்கள் தாகம் தீர்த்தாய். தயங்காமல் விலையைக் கூறு. கொடுத்து விடுகிறோம்' என்றார் ஒரு ஸ்ரீ வைஷ்ணவதாசர்.

'காசு வேண்டாம். மோக்ஷம் வேண்டும். கருணை காட்டுங்கள்' என்றாள் அவள்.

"மோக்ஷமா? அதை வேங்கடவனிடம் சென்று வேண்டிக் கொள். அவர்தான் அதற்கு அதிகாரி". என்றார் ஸ்ரீயதிராஜர். "சுவாமி! அவர் பேச மாட்டார். ஒரு சீட்டு எழுதிக் கொடுங்கள். தாங்கள் இந்த உதவியை செய்தால் போதும்" என்றாள் அவள்.

தன் மீது அவள் கொண்டுள்ள திட நம்பிக்கையை எண்ணி ஸ்ரீ யதிராஜர் வியப்பில் ஆழ்ந்தார். அவள் கோரியபடியே மோக்ஷம் அருளும்படி வேண்டி வேங்கடவனுக்கு விண்ணப்பம் எழுதி அவளிடம் கொடுத்தார். சீட்டைப் பெற்றுக்கொண்டு அவள் கோயிலுக்குச் சென்றாள். அருகில் இருந்த அர்ச்சகரிடம் சீட்டைக் கொடுத்து 'ஸ்ரீ யதிராஜர் கொடுத்த சீட்டு' என்றாள். சீட்டை கையில் வாங்கி அர்ச்சகர் ஆவலுடன் படித்தார். மறுகணம் பெருமாளின் திருக்கரம் சீட்டைப் பற்றியது. 'அவளுக்கு மோக்ஷம் அளித்தோம்' என்ற குரல் அசரீரியாய் அங்கு ஒலித்தது. மோர் வழங்கிய மூதாட்டி மோக்ஷலோகம் புறப்பட்டாள்.

திரு. ஆர். சுப்பராவ்.

# உங்களுக்குத் தெரியுமா?

பள்ளி கொண்டிருக்கும் பெருமாளின் சயன வகை எட்டு.

1. உத்தான சயனக் கோலம் : திருக்குடந்தை.
2. தருப்ப சயனக் கோலம் : திருப்புல்லாணி.
3. தல சயனக் கோலம் : கடல்மல்லை.
4. போக சயனக் கோலம் : திருச்சித்திரகூடம் (சிதம்பரம்).
5. மாணிக்க சயனக் கோலம் : திருநீர்மலை.
6. வடபத்ர சயனக் கோலம் : ஸ்ரீ வில்லிபுத்தூர்.
7. வீர சயனக் கோலம் : இந்தளூர்.
8. புஜங்க சயனக் கோலம் : திருவரங்கம்/திருவனந்தபுரம்.

திரு. மா. கோ. கோவிந்தராஜன்.

சிறுத்தாம்பு' என்ற இயலைப் பாடின பிறகே மற்ற ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரம் பாசுரங்களையும் பாடுவது வைணவர்களின் மரபாக அமைந்துள்ளது. "ஓராண் வழி" ஆசார்ய ஸம்ப்ரதாயத்தில் இடம் பெற்றதால்தான் பகவான் நாராயணனுக்கும் கௌரவம் கிட்டியுள்ளது. மேற்கத்திய நாடுகளிலும், கீழை நாடுகளிலும் வேதாந்தக் கருத்துக்கள் பல உள்ளன. ஆனாலும் யாவரும் நமது பிள்ளை லோகாசார்யர் கூறியபடி 'ஆசார்யாபிமாநமே உத்தாரகம்' என்ற கருத்தையடியொற்றி பல விவரங்களைத் தந்துள்ளனர்; தந்து கொண்டிருக்கின்றனர். 'ஆசார்யாபிமாநம்' என்பதற்கு ஆசார்யன் சீடனிடத்தில் வைத்துள்ள அபிமாநம் என்றும் கூறலாம்.

வைணவர் தமது திருவாராதனம் முடிந்த பிறகு நூற்றாண்டு பாடுவது அதாவது வாழ்த்துவது தமது ஆசார்யனைத்தான். 'பல்லாண்டு பல்லாண்டு' எனத் தொடங்கி

" மணவாளமாமுனியே!
இன்னமொரு நூற்றாண்டிரும்!"

என்று இறுதியில் முடிக்கின்றனர்.

"உலகமுண்ட பெருவாயனை" திருவேங்கடத்தானுக்கு 'கௌஸல்யா ஸுப்ரஜா ராம!' என்று ஸுப்ரபாதம் ஆரம்பித்தாலும்,

" ஸ்ரீமத் ஸுந்தரஜாமாத்ருமுநி மாநஸ வாஸிநே |
ஸர்வலோகநிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம் ||"

என்றே முடிப்பதையும் அநுபவிக்க வேண்டும். அதாவது "மணவாள மாமுனிகளின் மனதில் வசிக்கின்ற காரணத்தால் எல்லா லோகங்களிலும் வியாபித்து விளங்கும் அலர்மேல் மங்கையுறை மார்பனை உனக்கு மங்களம் உண்டாகட்டும்" என்று பொருள்.

எனவே நாம் யாவரும் பிள்ளை லோகாசார்யர் அருளியபடி தந்தம் ஆசார்யர் கூறியபடி அறநெறியைக் கடைப்பிடித்து சரம பர்வ நிஷ்டையில் இருந்து பேரின்பம் துய்ப்போம்.



# வேதங்களின் நோக்கம்

மனித குலம் தோன்றிய காலம் முதல் நான்கு வேதங்களும் இவ்வுலகில் புழக்கத்திலிருக்கின்றன. வேத காலம், இதிகாச காலம், புராண காலம் என்று காலங்கள் எவ்வளவு மாறிக் கடந்து வந்தாலும், வேதங்கள் இன்று வரை அழியாமல் மாறாமல் விளங்கி வருகின்றன. ஆகவே தான் அதை இவ்வுலகின் ஆதி இலக்கியம் என்று சொல்வதோடு அமர இலக்கியம் என்றும் சொல்லத் தோன்றுகிறது

இந்த வேதங்கள் வடமொழியிலும் மிகப்பழமையானவடமொழியிலேயே உள்ளன. உலகில் மிகப் பழமையான மொழிகளான கிரேக்கம், ஹீப்ரூ, லத்தீன் முதலிய மொழிகளின் வரிசையில் வடமொழியும் சேர்கிறது.

சாதாரணமாய் மனித குலம் தோன்றிப் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகே சப்த வடிவமாக மொழித் தோன்றியிருக்க வேண்டும். இந்த சப்த வடிவமான மொழி பல ஆயிரக்கணக்கான வருடங்களுக்குப் பிறகே வரி வடிவங்கள் பெற்று எழுத்துக்கள் உருவாகியிருக்கக் கூடும். இது மனித இயல் ஆராய்ச்சியாளர்களின் கருத்து. மனித குலம் தோன்றி முதல் முதலாக உருவாகிய மொழி வடமொழியாகத்தான் இருக்கக் கூடும் என்று நினைப்பதற்கு ஆதாரம் இருக்கிறது. வேதங்களில் சொல்லப்பட்ட சில செய்திகளிலிருந்தும் நமக்கு இது தெரிகிறது. ஒலி வடிவம் மொழியாக உருவான போது அது வடமொழியாகவே மலர்ந்ததாகப் பேசப்படுகிறது. பரப்பிரம்மம் நாதம், பிந்து என்று இரண்டாகப் பிரிந்ததாகவும், இதில் நாதத்திலிருந்து முதலில் 'அ'கார, 'உ'கார 'ம'காரங்கள் தோன்றி பிறகு இவைகள் அ, உ, ம, ஒருங்கிணைந்து 'ஓம்' என்கிற பிரணவம் தோன்றியதாகவும் நாம் அறிய முடிகிறது. இதுவே ஆதி இலக்கியங்களாகிற வேதங்களின் மூலமாக இருப்பதைப் பார்க்கிறோம்.

மேலும், வடமொழி ஒன்றில்தான் ஒவ்வொரு வார்த்தையிலுமுள்ள ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ஸ்வரம் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த ஸ்வரங்கள் சற்றும் மாறாமலே பரம்பரை பரம்பரையாக வாய்மொழியாகவே புழக்கத்திலிருந்து வருகின்றன. வேதங்கள், உபநிஷதங்கள், ஆகமங்கள் ஆகியவை எல்லாம் ஸ்வரத்துடன்தான் சொல்லப்படுகின்றன. ஒவ்வோரு அக்ஷரத்திற்கும் ஏன் இவ்வாறு ஸ்வரம் நிர்ணயம் செய்து அதிலிருந்து மாறாமல் அவை காப்பாற்றப்படுகின்றன என்பது சிந்தனைக்குரிய விஷயம்.

இவ்வாறு நிர்ணயிக்கப்பட்டிருக்கிற ஸ்வரங்கள் நான்கு. அவை உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், அநுத்ருதம் என்பவை ஆகும். ஒரு வார்த்தையில் உள்ள எழுத்துக்கள் நான்கு என்றால் இந்த நான்கு எழுத்துக்களுக்கும் நான்கு ஸ்வரங்கள் இருக்கக் கூடும். 'பிருகஸ்பதி' என்கிற வார்த்தையில் உள்ள பிரு, க, ஸ்ப, தி என்கிற நான்கு எழுத்துக்களுக்கும் முறையே உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், அநுத்ருதம் என்று ஸ்வரம் இருக்கக்கூடும். இந்த ஸ்வரங்கள் சற்றும் தவறாமல் வேதங்கள் ஓதப்படவேண்டும் என்று கட்டளையிட்டதோடு மட்டுமல்லாமல், யார் வேதங்களை ஓதும்போது ஸ்வரம் தவறிச் சொல்கிறார்களோ அவர்களுக்குப் பாபம் வந்து சேர்வதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஸ்வர நிர்ணயத்தால் பல நன்மைகள் உண்டு. வாய்மொழியாகவே போதிக்கப்பட்ட வேதங்கள் தலைமுறை தலைமுறையாக இந்த ஸ்வரத்துடன் காப்பாற்றப்பட்டு நினைவில் வைத்துக் கொள்ள வசதியாக இருந்தது. மொழிக்கு வரி வடிவம் தோன்றுவதற்கு முன்னிருந்து இந்த இலக்கியங்கள் காப்பாற்றப்பட்டு வந்தது இந்த ஸ்வரத்தால்தான்!

வடமொழியில் இரண்டு அல்லது மூன்று வார்த்தைகளைச் சேர்த்து எழுதுகிற கூட்டு எழுத்துத் தொடர் உண்டு. உதாரணமாக இந்திரனுடைய சத்ரு என்பதை 'இந்த்ர சத்ரு' என்று சேர்த்து எழுதுவார்கள். இந்திரனே சத்ருவாகிறான் என்கிற வார்த்தைச் சேர்க்கையும் இந்த்ர சத்ரு என்று தான் ஆகும். இந்த இரண்டு விதமான வார்த்தைகளின் அர்த்த வித்தியாசத்தைப் பிரித்துக் காட்டுவதற்கு ஸ்வர நிர்ணயம் இரண்டு விதமாகச் செய்து, வேதங்களில் இவை இரண்டையும் வேறுபடுத்திக் காட்டப்பட்டிருக்கிறது. இந்த வார்த்தைகளில் உள்ள 'இந்த்ர' என்னும் வார்த்தையில் உள்ள 'த்ர' எழுத்து ஒன்றில் உதாத்தமாகவும் இன்னொன்றில் ஸ்வரிதமாகவும் இருக்கும். ஆகவே இப்படிப்பட்ட ஸ்வர நிர்ணயத்தாலே வேத வாக்கியங்களின் அர்த்தங்களும் காப்பாற்றப்பட்டன.

வேதங்களில் மிகப் பழமையானது ரிக்வேதம் என்றும், அதற்கு அடுத்தபடியாக யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வண வேதம் என்று வரிசையாகத் தோன்றியிருக்கலாம் என்பதும் சில ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

இதில் 'ரிக் வேதம்' என்பது பல ரிக்குகள் என்று சொல்லக் கூடிய சிறு சிறு பாடல் பகுதிகளாகப் பிரிக்கப்


**'பூரம்' சத்தியமூர்த்தி**
சென்னை.

பட்டுக் காணப்படுகின்றன. இவைகளில் சொல்லப்பட்டவையெல்லாம் ஒரு தனி மனிதன், சமூகம் இவற்றின் பண்பாட்டினைக் கட்டிக் காப்பதில் மிகுந்த அக்கறை காட்டுபவையாய் இருக்கின்றன.

பொதுவாகவே வேதங்களின் கருத்துக்கள் சமூக, அரசியல் நிர்ணயச் சட்டங்களாகத்தான் இருக்கின்றன. தனி மனிதன், சமூகம், அரசன், மந்திரிகள், இவர்களின் கடமைகள், சமூகக் கட்டுப்பாடுகள் இவற்றைத் தெளிவுபடுத்துவதாகவே இவை அமைகின்றன. யாவரும் அமைதியுடனும், நிஜமான மனமகிழ்ச்சியுடனும் நிரந்தரமாக வாழ வேண்டும் என்கிற நோக்கத்தோடுதான் எழுதப்பட்டுள்ளன. இதில் டாகுபாடுகளோ, வேற்றுமைகளோ காட்டப்படவில்லை.

இந்த அடிப்படை சோஷலிஸ சமுதாய நியதிக்கு ஆதரவாகச் சில கட்டளைகளை 'ரிக்வேதம்' வகுக்கிறது. இதைப் பின்பற்றி ஒவ்வொரு தனி மனிதனும் நடந்துகொண்டால் ஒரு நிஜமான சோஷலிஸ சமுதாயம் உலகில் உருவாக நிச்சயம் வழி உண்டு.

இரண்டாவது வேதமாகிற 'யஜுர் வேதம்' பல யாகங்களைத் தொகுத்துக் கொடுத்திருக்கிறது. 'யஜுர்' என்றால் 'யாகங்களுடைய' என்று பொருள். உதாரணமாக அசுவமேதம், ராஜசூயம், வாஜபேயம், புத்ர காமேஷ்டி முதலிய பல யாகங்கள் இந்த யஜுர் வேதத்தில் உள்ளன. இவை தவிர ஆகமங்கள், பிரதிஷ்டை, ஸம்ப்ரோக்ஷணம்,பல சாந்திகள், பல விதமான மந்த்ரப்ரயோகங்கள் உள்ளன. சமூக வாழ்வுக்குத் தேவையான மந்திரங்களே இவைகள்.யாகங்கள் எவ்வாறு நடத்தப்படவேண்டும், இதனல் யார் யாருக்கு என்ன என்ன பலன்கள் கிடைக்கும் என்கிற விஷயங்கள் தரப்படுகின்றன. அரசர்கள் யாகங்களை நடத்துவதால் மக்கள் சுக வாழ்வு வாழ்வார்கள் என்றும், இன்ன இன்ன யாகத்திற்கு இன்ன இன்ன பலன்கள் என்றும் மிக விரிவாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஒரு யாகம் நடத்த என்ன என்ன பொருள்கள் வேண்டும், அதை எவ்வாறு சேகரிக்க வேண்டும் என்கிற விவரங்களை மிக விரிவாகக் கொடுத்துப் பிறகு, யாகபூமி தேர்ந்தெடுக்கப்படுவதிலிருந்து, யாக குண்டங்களைக் களைவது வரை மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. இந்த யாகம் வெற்றிகரமாக நடந்து முடிந்தால் அரசர் முதல் சாமானியன் வரை அடைகிற பயன்களையும் இதில் காண முடிகிறது. கடைசியாக இந்த யாகங்களை மேலே சொன்னபடி செய்ய முடியாதபோது இந்த மந்திரங்களை வேதம் நன்கு பயின்றவன் மனதால் ஸ்மரித்தாலும் அத்தனைப் பலன்களும் கிட்டி விடுகின்றன என்றும் சொல்கிறது. ஆகவேதான் பலனை எளிதில் அடைய வழி இருக்கும்போது யாகங்கள் அவ்வாறு செய்ய வேண்டிய அவசியமில்லை என்று பிற்காலத்தில் யாகங்கள் நிறுத்திக் கொள்ளப்பட்டன. அது மட்டுமல்ல. வேதத்தில் சொன்னபடி யாகங்களுக்கான பொருள் சேகரிப்பது மிகவும் கடினமான விஷயம் அதைச் சேகரிப்பவனும் நல்ல மந்திர சித்தி அடைந்தவனுகவும் மிகுந்த கட்டுப்பாடுகள் உள்ளவனுகவும்இருத்தல் வேண்டும்.உதாரணமாகப் பலாச மரத்தின் இலைகள் ஆயிரம் சேகரிக்கப்பட வேண்டும் என்ருல் இவை ஒரு நைஷ்டிகப் பிரம்மசாரியால், கிழக்கு நோக்கிச் செல்லும் கிளைகளில் உள்ள இலைகளை, அதிகாலை நேரத்தில் சேகரிக்கப்பட வேண்டும் என்று குறிக்கப்படுகிறது. பசும் நெய் இவ்வளவு வேண்டும் என்று ஒரு கணக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது இவ்வளவு நாட்களில் சேகரிக்கப்பட வேண்டும் என்றும் வரையறுக்கப்படுகிறது. பசுவின் நிறம் கொடுக்கப்படுகிறது. அதைத் தினமும் மேய்ச்சலுக்கு அழைத்துப் போகும் முறை சொல்லப்படுகிறது. கிழக்கு நோக்கிச் செல்லும் பலாச மரக்கிளையினுல் அதை இவ்வளவு முறைகள் தட்டி ஓட்ட வேண்டும் சொல்லப்படுகிறது. அது மேயும்போது இன்ன மந்திரம் ஜபிக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது

பிறகு அதன் பாலைக் கறக்கும் முறை சொல்லப்படுகிறது. அதன் கன்று சுவைக்கும்முன் பாலைக் கறக்க வேண்டும் என்று வரையறுக்கிறது. கன்று கூடச் சுவைக்காத பாலைக் கறந்து காய்ச்சி வெண்ணை எடுத்து உருக்கி இவ்வளவு நாட்களில் அந்த நெய் சேர்க்கப்பட வேண்டும் என்று விதிமுறை வகுக்கிறது.

இப்படிச் சேர்க்க வேண்டிய திரவியங்கள் மிக அதிகம். சமூகத்தின் பல தரப்பட்ட மனிதர்களின் ஒத்துழைப்பும் கட்டுப்பாடும் மிக அவசியமானது. இந்த மாபெரும் யாகங்களில் தவறுகள் நேரும்போது பாபங்களும் வரக்கூடும். இவைகளுக்கு விபரீதமான பலன்களும் ஏற்படக் கூடும். இக்காரணங்களினுலேயே பிற்காலத்தில் இந்த யாகங்கள் நிறுத்தப்பட வேண்டியவையாகிவிட்டன.

பிறவியினுலேயே ஒருவனுடைய ஜாதி நிர்ணயிக்கப்படக் கூடாது என்பது வேதங்களில் ஆணித்தரமாகச் சொல்லப்பட்ட செய்தி. மனிதன் எந்த ஜாதியில், குலத்தில் பிறந்தாலும், அவன் தனது குணத்தாலே, வாழ்க்கை நெறிகளாலே, பரிசுத்தமான எண்ணங்களாலே ஜாதியில் படிப்படியாக உயர்ந்து பிராம்மணனுக முடியும். அப்போது அவன் பிரம்மமாகிற பரம்பொருளை நன்கறிந்தவன், அவன் உயர்ந்த நெறிகளோடு வாழ்கிறவன். அந்த நிலை மனித வாழ்க்கை, தியாகம் செய்யும் வாழ்க்கை. தனக்கென வாழாத பிறர் நன்மையில் இன்பம் காண்கி அருள் நெறி வாழ்க்கை!

மனித குலத்தில் ஒவ்வொருவரும் வாழ்க்கையில் உயர்ந்து இந்த அருள் நெறியைக் கடைப்பிடித்து யாவரும் பிராம்மணராக வாழ்ந்து இறைவனேடு சேர்ந்து மாருத இன்பம் அடைய வேண்டும் என்பதே வேதங்களின் நோக்கமாகும்! ★

# ஆடலழகனின் அவதாரங்கள்

அவதாரங்கள் என்பது இரண்டு வகைப்படும். ஒன்று பூர்ணவதாரம், மற்றொன்று அஸம்பூர்ணவதாரம் என்று கூறப்படுகிறது. ஸ்ரீமந் நாராயணனுடைய அவதாரங்களில் இராமன், கிருஷ்ணன் இருஅவதாரங்கள் மட்டும் பூர்ணவதாரமாகும். அவதாரங்கள் எல்லாம் நாராயணனுடைய அம்சாவதாரமாகவே கூறப்பட்டுள்ளன. கீதையில் '**मम तेजोऽश-सम्भवम्**' என்று கூறப்பட்டுள்ளது. நாராயணனைப் போலவே, சிவனும் பல அவதாரங்கள் எடுத்துள்ளார். ஆனால் அவை யாவும் அஸம்பூர்ணவதாரங்களே. அதாவது வந்த காரியம் முடிந்தவுடன் தன் இருப்பிடம் சென்று விடுவது என்பதாகும். அவ்விதம் பார்க்கும்போது சிவன் எடுத்த அவதாரங்களை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். ஒன்று ஸம்ஹாரக அவதாரம், மற்றொன்று அனுக்ரஹாவதாரம் என்று. இக்கட்டுரையில் அனுக்ரஹாவதாரத்தைப் பற்றிப் பார்ப்போம்.

டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமணியன்,
*திருப்பதி.*

கைலாஸபதிக்கு இரண்டு பெயர்கள் முக்யமாக கூறப்படுகின்றன. ஒன்று சிவன், மற்றொன்று ருத்ரன். சிவன் என்றால் நன்மையைச் செய்பவன். ருத்ரன் என்றால் அழிக்கும் ஆற்றல் உடையவன் என்று பொருளாகும். சில்ப சாத்திரத்தில் 7 கோடி மூர்த்தங்கள் காணப்படுகின்றன என்று கூறப்படுகிறது. 'சிவ' என்று பெயர் சொன்னாலே மகிழ்ந்து மனமிரங்கி வரம் அருள்வார். ஆகையால் இவருக்கு ஆசுதோஷ: என்ற பெயரும் உண்டு. அநேகமாக புராணங்களில் சிவன் வரம் கொடுப்பதும், அதனால் ஏற்படும் இன்னல்களை நாராயணன் தீர்ப்பதுமாகவே கதைகளில் காணப்படுகின்றன. ஆகையால் சிவன் என்பவர் அனுக்ரஹ மூர்த்தியாக பல விதமாகக் காணப்படுகிறார். அவையாவன:

1. விஷ்ணு அனுக்ரஹ மூர்த்தி
2. நந்தீச அனுக்ரஹ மூர்த்தி
3. கிராதார்ஜுன மூர்த்தி
4. விக்நேச அனுக்ரஹ மூர்த்தி
5. இராவண அனுக்ரஹ மூர்த்தி

இவைகளைத் தவிர நாயன்மார்களுக்கு அருள் கூர்ந்து அனுக்ரஹித்த மூர்த்திகளுமுண்டு. ஆனால் சிற்ப சாத்திரங்களில் இந்த ஐந்து வகைகளே பழமையானதாகக் கூறப்பட்டுள்ளன.

**விஷ்ணு அனுக்ரஹமூர்த்தி :**

இந்த மூர்த்தியின் கதை ஸௌர்ய புராணத்தில் வருகிறது. அங்கே தேவர்கள் அசுரர்களால் துன்புறுத்தப்பட்டு ஸ்ரீமந் நாராயணனிடம் செல்லுகிறார்கள். அப்பொழுது நாராயணன் யோசிக்கிறார்.

**जालन्धरवधार्थाय भवचक्रं शूलपाणिनः ।**
**महादेववराल्लब्धं जहि तेन महाबलात् ॥**

'சுவாமி! ஜலந்தரனைக் கொன்ற சக்ரம் சிவனிடத்தில் உள்ளது. அதைக் கொண்டு அரக்கர்களை அழித்துவிடலாம்' என்று கூறுகிறான் இந்திரன்.

**हिमवत्पर्वतं गत्वा पूजयामास शंकरम् ।**
**लिंग तत्र प्रतिष्ठाप्य स्नाप्य गन्धोदकैः शुभैः।**
**सम्पूज्य परया भक्त्या पुण्डरीकैर्द्विजोत्तमाः ।**

இந்திரனின் யோசனையைக் கேட்டு ஸ்ரீமந் நாராயணன் ஹிமயமலையை அடைந்து பரமேச்வரனை லிங்க வடிவமாக்கி ஆயிரம் தாமரை மலர்களால் ஆயிரம் நாமாக்களைக் கூறி அர்ச்சிக்கிறான். அவ்வமயம்,

**जिज्ञासार्थं हरेर्भक्त्या: कमलेष शिव:स्वयम्**
**तत्रैकं गोपयामास कमलं मुनिपुंगव: ॥**

சிவன் நாராயணனின் பக்தியைச் சோதிக்கக் கருதி, பூஜைக்கு வைத்துள்ள ஆயிரம் தாமரை மலர்களில் ஒன்றை எடுத்து மறைத்து விட்டார்.

**हृते पुष्पे तदा विष्णु: चिन्तयन् किञ्चित ।**
**ज्ञात्वात्मनोऽक्षि उद्धृत्य पूजयामास शंकरम् ॥**

நாராயணன் ஆயிரத்தில் ஒரு மலரைக் காணாததால் தாமரைக் கண்ணனான நாராயணன் தன்னுடையகண்ணை ஒன்று எடுத்து அர்ச்சித்தான்.

**अथ ज्ञात्वा महादेवो हरेर्भक्ति सुनिश्चलं ।**

நாராயணனுடைய பக்தியை அறிந்த சிவன் எதிரில் தோன்றினார்.

**देवकार्यमिदं ज्ञातं इदानीं मधुसूदन ।**
**दिव्यं ददामि ते चक्रं अद्भुतं तत्सुदर्शनम् ।**
**एवमुक्त्वा ददौ चक्रं सूर्यायुतसमप्रभम् ।**
**लोकेषु पुण्डरीकाक्ष इति ख्याति गतोहरि: ।**

'நாராயண! உன்னுடைய பக்தியைப் பார்த்துப் பரவசமடைந்தேன். தேவர்களின் குறைகளைத் தீர்க்க அசுரர்களை அழிக்க அற்புதமானதும், ஆயிரம் ஆதவனின் ஒளி பொருந்தியதுமான ஓர் சக்ராயுதத்தைக் கொடுக்கிறேன். அதைப் பெற்றுக் கொள். இதற்குப் பெயர் "ஸுதர்சனம்" என்பதாகும். புண்டரீகம் என்றால் தாமரை என்று பொருள். அதை எடுத்து எனக்கு அர்ச்சித்ததால் உனக்கு இன்றிலிருந்து "புண்டரீகாக்ஷன்" என்று பெயர் பெறு

வாய்'' என்று கூறி அனுக்ரஹித்து மறைந்தார்.

இந்த வரலாறு கூறும் க்ஷேத்ரம் தஞ்சை ஜில்லாவில் நன்னிலம் தாலுகாவில் ''திருவீழி மலை'' என்ற ஊராகும். இங்குள்ள இறைவனுக்குப் பெயர். 'வீழிநாதன்' (नेत्रार्पणपुरोश्वर:) என்பது. இதனால் விஷ்ணுவிற்கு அனுக்ரஹம் செய்தது தெளிவாகும். இதனுடைய பிரதிமை காஞ்சிபுரத்திலும், மதுரையிலும் பார்க்கலாம்.

**நந்திகேச்வரானுக்ரஹமூர்த்தி :**

சிலாதர் என்ற மகரிஷி ஒருவர் இந்திரனைக் குறித்துத் தவம் செய்தார்., இந்திரன் அவர் முன் தோன்றினான். என்ன வேண்டுமென்று கேட்டான். அதற்கு சிலாதர் 'மனிதன் மூலமாக பிறக்காமலும், மூப்பு மரணம் இவைகள் அற்றவனுமான ஒரு பிள்ளை வேண்டும்'' என்று கேட்டார். இந்திரன் 'என்னால் அவ்வரம் கொடுக்க இயலாது சிவனால்தான் கொடுக்க முடியும். ஆகையால் சிவனைக் குறித்துத் தவம் செய்' என்று கூறினான்.

சிலாதர் ஒரு நாள் யாகம் செய்து கொண்டிருக்கும்போது, யாககுண்டத்திலிருந்து மூன்று கண்கள், நான்கு கைகள், ஜடை, மகுடம் இவைகளோடு கூடிய ஒரு உருவம் உண்டாயிற்று. அதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தார். மகிழ்ச்சியின் காரணமாகவே நந்தயதீதி=நந்தீ (नन्दयतीति=नन्दी) என்று பெயர் சூட்டினார். அந்த உருவம்தான் நந்தி.

''நான் என் தகப்பனாரின் ஆச்ரமத்திற்குள் சென்றவுடன் சாதாரண மனிதக் குழந்தையாக மாறிவிட்டேன். எனக்கு ஏழு வயதிற்குள் எல்லாவித வேத, சாஸ்த்ரங்களையும் என் தகப்பனார் சிலாதர் கற்றுக் கொடுத்து விட்டார். அவ்வமயம் எங்கள் ஆச்ரமத்திற்கு மித்ரா, வருணர் என்ற தேவதைகள் வந்தார்கள். என்னுடைய கல்வி அறிவைப் பார்த்து 'இவ்வளவு சிறு வயதில் எவ்வளவு கல்விகளைக் கற்றுக் கொண்டாய்' என்று ஆச்சர்யமடைந்தார்கள். மேலும் என் தகப்பனாரிடம் ''உங்கள் பிள்ளை நன்கு தேர்ச்சி பெற்றுள்ளான். ஆனால் அவனுக்கு ஆயுட்காலம் இன்னும் ஓர் ஆண்டுதான்'' என்று கூறினார்கள். என் தகப்பனார் இவ்வார்த்தைகளைக் கேட்டு மிகவும் வருந்தினர். இவைகளைக் கேட்டுக் கொண்டிருந்த நான் தகப்பனாரிடம் உத்தரவு பெற்று பரமசிவனைக் குறித்து தவம் செய்ய வனத்தை நோக்கிப் புறப்பட்டேன்.

காட்டில் பல வருடங்கள் கடுமையான தவங்கள் செய்தேன். எளிதில் மகிழ்ச்சியடையுமியல்பு உடைய பரமேச்வரன் அம்மையுடன் சேர்ந்து காக்ஷியளித்தார். அவர்களைக் கண்டவுடன் கைகூப்பித் தோத்திரம் செய்தேன். பரமன் 'உன்னை மித்ரா வருணர்தானே இங்கே அனுப்பினார்கள்' என்று கேட்டார். நான் ஆம் என்றேன். உடனே பரமன் என்மேல் அருள் கூர்ந்து, 'உனக்கு இனி மூப்பும், மரணமும் கிடையாது. மேலும் நீ என்னுடைய சிவகணங்களுக்குத் தலைவனாகவும் இருக்கக் கடவாய்' என்று கூறித் தன் கழுத்திலிருந்த மாலையை எடுத்து என் கழுத்தில் போட்டார். நான் அந்த மாலையை அணிந்தவுடன் திவ்யமான ரூபத்தை அடைந்தேன். பரமன் மறைந்து விட்டார்.

மருத் என்பவருடைய பெண்ணை ஸுயசை என்ற அழகியோடு திருமணம் நடைபெற்றது. நாங்கள் இருவரும் அன்னை பார்வதியின் அருகிலேயே இருந்து கொண்டு பக்தி செய்து கொண்டிருக்கிறோம்'' என்று ஸனத்குமாரருக்கு நந்தியானவர் தன் கதையைச் சொன்னார். இவ்வரலாறு சிவபுராணத்தில் இருக்கிறது.

**அர்ஜுனனுக்கு அனுக்ரஹித்த மூர்த்தி :**

பாண்டவர்களைச் சூதாட்டத்தில் வென்று அப்பாண்டவர்களைக் காட்டிற்கு அனுப்பி வைத்தான் துரியோதனன். மேலும் காட்டிலும் துர்வாஸரை அனுப்பி வைத்து பாண்டவர்களுக்குத் தொல்லை கொடுத்து வந்தான். இவ்விதம் பல கஷ்ட நஷ்டங்களைப் பாண்டவர்களுக்கு ஏற்படுத்தி வந்தான் துரியோதனன். ஆனால் இவைகள் எல்லாவற்றையும் ஸ்ரீகிருஷ்ணன் அவ்வப்பொழுது போக்கி அவர்களைக் காப்பாற்றி வந்தார். ஒரு சமயம் ஸ்ரீ கிருஷ்ணனும், வியாஸ முனிவரும் பாண்டவர்களைக் குறித்து ''ஹே பாண்டவர்களே! நீங்கள் சிவனை ஆராதித்தால் உங்களுக்கு நன்மை உண்டாகும்'' என்று கூறினார்கள். இந்த வார்த்தைகளைக் கேட்ட அர்ஜுனன் தவம் செய்வதற்காக மலையை நோக்கிப் புறப்பட்டான். அங்கே சிவனைக் குறித்துக் கடுந்தவம் செய்தான். முதலில் தன் தகப்பனாரான இந்திரனைக் குறித்துப் பிரார்த்தித்தான். இந்திரன் தோன்றி ''அர்ஜுன! சிவனின் அவதாரமான அச்வத்தாமனைக் கொல்வது அவ்வளவு சுலபமல்ல. ஆகையால் நீ சிவனைக் குறித்துத் தவம் செய்வதே மேல்'' என்று கூறினான். அதன்படி சிவனைக் குறித்துத் தவமிருந்தான்.

இவ்விபரம் துரியோதனனுக்குத் தெரிய வந்தது. துரியோதனன் மூகன் என்ற அரக்கனை அனுப்பி வைத்தான். அந்த அசுரன் ஓர் பன்றி உருவம் எடுத்து அந்த மலைப் பிரதேசத்திற்குச் சென்றான். இதற்கிடையில் பரமேச்வரன் அர்ஜுனனுக்கு அருள்புரிவதற்காக வேடன் உருவங் கொண்டு அதே மலைச்சாரலுக்குச் சென்றார். இந்த பன்றி அர்ஜுனனுக்கு எதிராக அவனைத் துன்புறுத்த வரும்பொழுது சிவனை நினைந்து பன்றியின் மேல் அம்பை எய்தினான் அர்ஜுனன். அதே சமயத்தில் வேடனான சிவனும் அந்தப் பன்றியின் மேல் பாணத்தை விட்டான். இரண்டு பேரும் பன்றியை நான்தான் முதலில்பாணம் விட்டுக் கொன்றேன்.

**(35-ம் பக்கம் பார்க்க)**

# வேங்கடம் மாலவனுக்கா? வேலவனுக்கா?

'திருவேங்கடம் திருமாலுக்கு உரியதன்று; அது முருகனுக்கு உரியது. வைணவர்கள் முருகன் உருவத்தையே மாற்றித் திருமால் உருவமாகச் செய்து விட்டார்கள்' என்று கற்றோர்களிடையே ஒரு பேச்சு நிலவி வருகின்றது. இக்கருத்தினைப் பேராசிரியர் மு. இராகவய்யங்கார் அவர்கள் மறுத்து பல்லாண்டுகட்கு முன்னர் ஓர் ஆய்வுக்கட்டுரை வரைந்துள்ளார். அந்து இன்னும் கற்றவர்களின் கவனத்தை ஈர்க்கவில்லை என்று கருத வேண்டியுள்ளது. அதுபற்றிய கருத்துகளை மீண்டும் அறிஞர்கள்முன் வைக்கின்றேன்.

**ஆய்வுக்குரிய செய்திகள் :**

1. இன்னின்ன நிலம் இன்னின்ன தெய்வத்திற்கு உரியதென்று பாகுபடுத்தி நூற்பா செய்யுமிடத்தில் (தொல்.பொருள்.அகத்திணையியல்-5) தொல்காப்பியர் திருமாலுக்கு முல்லை நிலமாகிய காட்டையும், முருகனுக்கு குறிஞ்சி நிலமாகிய மலையையும் உரிமையாக்குவதால், மலைநிலமாகிய வேங்கடம் முருகனுக்கு உரியதேயன்றித் திருமாலுக்கு உரியதாகாது என்பது.

2. 'ஓடியா விழவின் நெடியோன் குன்றம்' (அகம்-149) என்ற அகநானூற்றுத் தொடரில் 'நெடியோன் குன்றம்' என்பதற்கு 'முருகன் மலை' என்று பொருள் கொள்வது போல், சிலப்பதிகாரத்தில் வரும் 'நெடியோன் குன்றமும்' என்ற தொடருக்கும் (வேனிற் காதை) பொருள் கொள்ள வேண்டும் என்பது.

3. சிலப்பதிகாரம் காடு காண் காதையில் 'வீங்கு நீரருவி வேங்கடம்' என்பது முதல் 'செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்' என்பது வரையுள்ள அடிகள் இடைச்செருகல் என்பதும், முருகக் கடவுட்கே வழங்கியிருந்த அடைமொழிகளைப்பிற்காலத்தில் யாரோ ஒருவர் திருமாலுக்குப் பொருத்த வேண்டிச் 'செங்கண் நெடியோன்' எனச் சிறப்பித்தும் 'பகை வெண் ஆழியும் பால் வெண் சங்கமும்' என்று, இராமாநுசர் காலத்திற்கு முன்பில்லாத திருமாலடையாளங்களை இடையிற் புகுத்திப் போந்ததுவுமாகும் என்பது.

பேராசிரியர் டாக்டர். ந. சுப்புரெட்டியார்,
சென்னை.

4. திருவேங்கடமுடையான் திருமேனியில் நாகாபரணமும் சடையும் உள்ளன என்பது எல்லார்க்கும் தெரிந்ததாதலால், இதுவே திருமாலுக்கு அங்கே சம்பந்தம் இல்லை என்பதற்குச் சான்று என்பது.

இந்த நான்கு காரணங்களையும்



திருமலைத்தோற்றம். - திரு. டி. எஸ். திருவேங்கடம்

தமிழ் இலக்கிய அடிப்படையில் ஆராய முற்படுகின்றேன்.

முதலாவது காரணம் :

குறிஞ்சி நிலத்துக் கடவுள் முருகனே யாதலால் 'நெடியோன் குன்றம்' என்று வேங்கடத்தை மாயோன் மலையாக இளங்கோ அடிகள் கூறியது நியாயம் ஆகாது என்று கூறும் வாதம் பொருத்தமற்றது. அதே காதையில் பாண்டி நாட்டு அழகர் மலையையும் திருமாலிருஞ்சோலையையும் கூறியுள்ளார் அன்றோ? அம் மாதிரியே திருவேங்கடத்தையும் அவர் மாலவன் குன்றமாகக் கருதுவது பொருத்தந்தானே. தொல்காப்பியர் ஒவ்வொரு கடவுளர்க்கும் நிலம் வகுத்திருப்பது உண்மையே யாயினும், மலைப்பகுதியில் திருமால் கோயில் கொள்வது உண்டென்றால் அது பிழை என்றும், அதனால் அத் திருமாலை மலைக்குரிய முருகனுக்கி விடுதல் தமிழ் நூல் முறை என்றும் துணிவதுதான் மிகவும் விநோதமான போக்காகும். எனவே, இப்போக்கினை ஏற்றுக் கொள்வோமாயின், ஆழ்வார் பெரு மக்களால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற திருமாலிருஞ்சோலை, திருக்குறுங்குடி, திருநீர்மலை, திருமெய்யம், சிங்கவேள் குன்றம் (அகோபிலம்) திருக்கடிகை (சோழ சிங்கபுரம் சோளிங்கர்), பதரிகாசிரமம் முதலான மலைப்பகுதியில் கோயில் கொண்டுள்ள திருமால்களை என்ன செய்வது? அன்றியும்,வயல் (மருதம்) கடல் (நெய்தல்) நிலப்பகுதிகளில் கோயில் கொண்ட திருமால், சிவபிரான், முருகன் முதலிய தெய்வங்களையும் அவ்விதமே நீக்கிவிட்டு, அவ்வந்நிலங்களுக்கு உரியவராகத் தொல்காப்பியத்தில் வரையறுக்கப் பெற்ற இந்திரனையும் வருணனையும் முறையே குடியேற்ற வேண்டியதும் இன்றியமையாத தாகிவிடும். இஃது அசாம்பாவிதமான செயல்களன்றோ?

முருகக் கடவுள் மலை (குறிஞ்சி)த் தெய்வமாதலால் திருவேங்கடமலைக்



திருமலைக்கோயில் - திருமதி. எம். ராஜலக்ஷ்மி

கும் அவர் பொதுவில் அதிதெய்வம் என்பதில் மறுப்பில்லை. ஆனால் அவருக்குரிய மலையில் வேறெத் தெய்வமும் சிறப்பாகக் கோயில் கொள்ளக் கூடாது என்று துணிவதே நூல் வழக்கோடும் உலகவியல்போடும் மாறுபடுவதாகும். திருவேங்கட புராணத்தில் கூறப் பெற்ற வாமன சரிதத்தில், சுப்பிரமணியர் தாரகாசுரனைக் கொன்ற தோஷம் போகும் பொருட்டு, திருவேங்கடத் திருமாலைக் குறித்துத் தவம் செய்தார் என்று கூறப்பெற்றுள்ளது. ஒரு கடவுளுக்குரிய கோயிலில் வேறு கடவுளரைக் காப்பாளராகவும் (க்ஷேத்திர பாலகராகவும்), வழிபடுபவராகவும் அமைக்கும் மரபு உண்டு என்பதை நாம் அறிவோம்.எடுத்துக் காட்டாக, திருவரங்கம் பெரிய கோயிலின் கோயில் காப்பாளருள் விநாயகரும் (தும்பிக்கையாழ்வார்) ஒருவர். அங்ஙனமே திருவேங்கடத்திற்கு முருகவேள் கோயில் காப்பாளராகவும், திருமாலை வழிபடுபவராயுமுள்ளார்.

கந்தன் வேங்கடக் காவல் இயற்றிடற்
கெந்த நோன்பியற் றிப்பெற்றனன்

என்று திருவேங்கடப் புராண ஆசிரியரும்,

"'வந்திக்க வந்தனை கொள்'ளென்று
கந்தனும் மாதவரும்
சிந்திக்க வந்தனை வேங்கடநாத!"
(திருவேங்கடத் தந்தாதி 3)

(வந்திக்க-வணங்க; வந்தனை-வணக்கம்; கந்தன்-முருகன்; மாதவர்-முனிவர்; சிந்திக்க-தியானிக்க; வந்தனை-வந்து தோன்றினாய்).

என்று திவ்விய கவியும் பாடுவதாலும் அறியலாம். இங்ஙனமே, திருமாலின் முக்கிய இடமாகச் சங்க நூலான பரிபாடலிலும், சிலப்பதிகாரம் கூறும் திருமாலிருஞ் சோலைமலையிலும் முருகனுக்கு இடம் உண்டு. இதனை,

"—பஞ்சவர்தம்
பங்கங் களைந்தான்
பனிரெண்டு கையொருவர்
பங்கம் களைந்தான்
பதி"

என்று அழகர் கலம்பக ஆசிரியர் கூறுவதனாலும் அறியலாம்.

இரண்டாவது காரணம் :

அகநானூற்றுப் (அகம்-149) பாடல் அடியிலுள்ள 'நெடியோன்' என்ற சொல் முருகனைக் குறிப்பது உண்மையே யாயினும், இங்ஙனம்

அருகிக் காணப்பெறும் வழக்கு திருமாலுக்குப் பெருகி வழங்கும் வழக்காக இருப்பது சிந்திக்கத் தக்கது. 'நெடியோன்' என்பது பொதுவாக 'உயர்ந்தோன்' என்ற பொருளுடையது. இச்சொல் மற்றத் தெய்வங்கட்கும் வழங்கும் ஒரு பொதுச் சொல்லாகும். அங்ஙனம் வழங்கும் போது அஃது அடையுடனுவது முன் தொடர்ச்சி பற்றியாவது அவர்களுள் ஒருவரைக் குறிக்குமேயன்றித் தனித்து நின்ற நிலையில் அங்ஙனம் அவர்களைக் குறிக்கும் ஆற்றலுடையதன்று.

முந்நீர் விழவின் நெடியோன்

(புறம் 9)

தேர்வீசிருக்கை நெடியோன்

(ஷை. 114)

பொலந்தார் மார்பின் நெடியோன்

(மதுரைக்காஞ்சி அடி 61)

நிலந்தரு திருவின் நெடியோன்.

(சிலப். 28 அடி 4)

என்று பாண்டியனையும் பாரி போன்ற அரசர்களையும் அடையுடன் 'நெடியோன்' என்ற சொல்லால் பண்டை நூல்கள் கூறுவதைக் காணலாம். அங்ஙனமே முருகவேளும் 'பல்பொறி மஞ்ஞை வெல்கொடியுயரிய, ஒடியா விழவின் நெடியோன்' (அகம் 149) என்றும், 'சேவலங் கொடிய நெடியன்' (பரிபாடல்) என விசேடத்துடனும், 'நெடியோய் நின்குன்றின் மிசை' (பரிபாடல்) என முன் தொடர்பு பற்றியும் கூறுவது பண்டைய வழக்கே என்பது ஈண்டு அறியத் தக்கது. ஆனல், திருமாலைக் குறிக்கும்போது 'நெடியோன்' என்பது அக்கடவுட்குத் தமிழில் அநாதியாய் வழங்கும் 'மால்', 'மாயோன்' என்பவை போன்ற திருநாமமாய், நிலங்கடத்தற்கு நீண்ட திரிவிக்கிரமன் என்ற பொருள் குறிக்கும் பெயராகும்.

'நெடியோன் குறளுருவாகி'

'நெடியோன் மார்பில் ஆரம்போல'

'நெடியோன் மயங்கி நிலமிசைத்

தோன்றி'

'நெடியோன் அன்ன நெடுங்கை'

(பெருங். 5,4:9)

'நெடியவன் மூவகைப்படிவம்'

(ஷை. 2,15:10)

என்று அடைகளும் முன் தொடர்ச்சிகளும் இல்லாமல் தனித்து நின்றே திருமாலைக் குறிக்கும் ஆற்றலுடைய தாதலைக் காணலாம்.

திருவேங்கட முடையானை 'நெடியோன்' என்ற பெயரால் இளங்கோவடிகள் கூறியது அப்பெருமானைத் திரிவிக்கிரமனுகக் குறிக்கும் ஆழ்வார் பெருமக்கள் வழக்குகட்கு மிகவும் ஒத்துள்ளதையும் காணலாம். 'நெடியோனே வேங்கடவா' (பெரு. திரு. 4:9) என்றூர் குலசேகரப் பெருமாள். 'தாள் பரப்பி மண் தாவிய ஈசனை' (திருவாய் 3.3; 11) என்று சிறப்பித்தார் சடகோபர். நச்சினுர்க்கினியரும் 'நிலங்கடந்த நெடுமுடியண்ணலை நோக்கி உலகம் தவம் செய்து வீடு பெற்ற மலை' (சிறப். பாயிரம் உரை) என்று திரிவிக்கிரமனுகவே திருமலை எம்பெருமானைக் கூறி மகிழ்வதைக் காணலாம். தொல்காப்பியப் பாயிரத்திலேயே உரையாசிரியர் திருவேங்கடத்தைத் திருமாலுக்கு உரிய தாக்கி விட்டார் என்பது கருதத் தக்கது. இவ்வாறு 'மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால் ஞாலம் அளந்த' வரலாற்றுல் திருவேங்கட முடையானைப் பெரியோர்கள் கூறி வருவது பற்றி ஈட்டாசிரியரும் குறிப்பிடுகின்றூர்: 'திருவேங்கடமுடையானையன்றே கவிபாடிற்றெனனில், 'கொண்டாய் குறளாய் நிலமீரடியாலே, விண்டோய் சிகரத் திருவேங்கடம் மேய, அண்டர் (பெரி. திரு. 1-10:4) என்றும், 'மண்ணளந்த இணைத் தாமரைகள்' என்றும், 'உலகம் அளந்த பொன்னடியே அடைந்துய்ந்து' என்றும், ஆழ்வார்கள் அருளிச் செய்யா நிற்பார்கள்: எல்லாரையும் திருவடிக் கீழ் இட்டுக் கொள்ளுகைக்காக நிற்கிற நிலையாலும், 'வரையாதே கானமும் வானரமுமான' இவற்றுக்கு முகங்கொடுத்துக் கொண்டு நிற்கிறபடியாலும் திருவேங்கடமுடையானை ஸ்ரீவாமனனுகச் சொல்லக் கடவதிறே' என்பதாக.

வேதத்திலும் 'அகில புவனங்களையும் தன் மூவடிக்கீழ் ஒடுக்கியவன் எவனே, அப்பெருமான் கிரியில் நிலை பெற்றருள்கின்றுன்' என்ற கருத்து திரிவிக்கிரமனுகிய திருவேங்கடமுடையான் திருமலையில் நித்திய வாசம் செய்தருள்கின்ற சிறப்பையே குறிப்பதாக விளக்குவர் பேராசிரியர் மு. இராகவய்யங்கார். [ஆராய்ச்சித் தொகுதி. கட்டுரை 20 (பக். 269)] இந்த விழுப்பொருளையே இறைத்தார் ஒருவருமில்லாமறைகளை இன் தமிழால், குழைத்தாராகிய குருகைப் பிரானும் (சட. அந். 59),

குன்றம் ஏந்திக்

குளிர்மழை காத்தவன்

அன்று ஞாலம்

அளந்த பிரான், பரன்

சென்று சேர்திரு

வேங்கட மாமலை.

(திருவாய். 3.3:8)

என்று அருளிச் செய்தார். இக் கருத்தை உட்கொண்டே சுவாமி தேசிகனும்,

விண்ணவரும் மண்ணவரும்

விரும்பு வெற்பு

வேங்கடவெற் பெனவிளங்கும்

வேத வெற்பே.

(தே. பி. 82)

என்ற அடிகளில் 'வேத வெற்பு' சிறப்பித்து உரைத்தனர் போலும்.

மூன்றுவது காரணம்:

''வீங்கு நீர் அருவி... நின்ற வண்ணமும்'' (சிலம்பு காடுகாண் அடி 41-51) என்று கூறியது இடைச் செருகல் என்று கூறியவரின் கூற்று தவறு என்பதை வேறோர் இடத்தில் விளக்கியுள்ளேன். (இன்றைய திருவேங்கடம்—என்ற கட்டுரையில்)சமாதானம் கூற முடியாததற்கெல்லாம் எளிதான வழியாக இக்காலத்தார் மேற்கொள்ளும் முறை 'இடைச்

செருகல்' என்பது; இதற்குக் கூறும் நியாயங்களும் விநோதமாக அமையும். 'பகையணங்காழியும் பால் வெண் சங்கமும்' (அடி 47) என்று திருமாலுக்குக் கூறப் பெற்ற அடையாளங்கள் இராமாநுசர் எம்பெருமானின் திருமேனியில் நிறுவிய பின்பு தான் திருவேங்கடம் திருமால் திருப்பதியானது என்று கருதுவது தவறானது. இது பழைய தமிழ் நூல்களையேனும் வழக்குகளையேனும் அறியாமல் கூறியதாகும். இராமாநுசருக்கு முன்பிருந்த ஆழ்வார் பெருமக்கள் திருவேங்கடமுடையானைத் திருமாலாகவே பாடியதை நாம் கருதுதல் வேண்டும். 'தாழ் சடையும் நீள் முடியும்' (மூன். திருவந். 63) என்று தொடங்கும் பேயாழ்வார் பாடல் அரி-அரன் வடிவமான திருவேங்கடமுடையான் வடிவைப் புகழ்ந்ததாகும். பொய்கையார் 'கைய வலம் புரியும் நேமியும்' (முதல். திருவந். 28) என்றருளியிருப்பதையும், குலசேகரப் பெருமாள் 'மின் வட்டச் சுடராழி' (பெரு. திரு. 4:3) என்று கூறியிருப்பதையும், திருமங்கை மன்னன் 'சுடராழிவலனுயர்த்த மல்லார் தோள் வடவேங்கடவாணன்' (பெரி. திரு.) என்று நுவன்றிருப்பதையும், நம்மாழ்வார் 'சீருபுரியும் திருநேமி வலவா.. திருவேங்கடத்தானே' (திருவாய் 6, 10:2) என்று பணித்திருப்பதையும், பெரியாழ்வார் பெண்கொடி 'வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே' (நாச். திரு. 1:1) என்று அருளிச் செய்திருப்பதையும் காண்பார்க்கு இவ்வுண்மை விளங்காமற் போகாது. இவற்றையெல்லாம் யாதோ ஒரு காரணத்தால் புறக்கணித்தாலும் ஐயனரிதனார் வாக்கிலுள்ள (புறப்பொருள் வெண்பாமலை-பாடாண் படலம்-புலவராற்றுப் படை-43-எடு செய்யுள்) 'ஆழியவன்' என்ற தொடராவது இவ்வுண்மையை நிலைநாட்டாமற் போகாது.

இளங்கோ அடிகள் கூறிய திருவேங்கடச் சிறப்பு முருகனுக்கே உரியதென்றும், அது பின்னர் திருமால் திருப்பதியாகின்றது என்று கருதுவது இன்னொரு வழியாலும் பிழையுடையதாகின்றது. திருவேங்கடத்தின் பெருமையைக் கோவலனுக்குரைத்த மாங்காட்டு மறையோன் தன்னைத் திருமாலடியான் என்று குறிப்பிட்டுத் தான் திருமால் திருத்தலங்கட்குத் திருத்தலப் பயணமாகப் புறப்பட்டவன் என்று கூறிய கதை நிகழ்ச்சியைப் பாடுமிடத்தில் 'வீங்கு நீர் அருவி... நின்றவண்ணமும்' (சிலம்பு-காடுகாண்-அடி 41-51) என்ற திருமலை வருணனை வருகின்றது. இதனை,

(44-ம் பக்கம் பார்க்க)

# சரம ஸ்லோகத்தின் பொருள் சுருக்கம்



**அவதாரிகை :**

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நன்கு அதன் தத்வார்த்த விசேஷங்களுடன் புரிந்து கொள்வதற்கு, ஏதுவாக இருப்பதான, "ரகஸ்ய த்ரயம்" எனப் பெயர் கொண்ட திருமந்திரமாகிய, திருவெட்டெழுத்தின் பொருள் சுருக்கத்தை "ஸப்தகிரி" ஏப்ரல் 1986 இதழிலும், இரண்டாவது மஹாமந்த்ர ரத்னமாகிய, "த்வயத்தின் பொருள் சுருக்கத்தை" ஸப்தகிரி ஏப்ரல், மே 1987 இதழ்களிலும் எழுதிய ஆசையால், இப்போது ரகஸ்யத்ரயஸாரத்தில் கடைசியாகவும், மூன்றுவதாகவும் உள்ள மகா மந்த்ரமாகிய "சரமஸ்லோகத்தின்" பொருள் சுருக்கத்தை அடியேனுடைய சிற்றறிவுக்கு எட்டியபடியும், யதாசக்தி யதாமதி எழுதுகிறேன். க்ரந்த காலக்ஷேபாதிகளை செய்ய முடியாதவர்களை மனதிற் கொண்டு எழுதுகிறேன். இதில் காணப்படும் குற்றங்கள் யாவும் அடியேனுடையதே. காணப்படும் குணங்கள் எல்லாம் ஆசார்யனின் மஹாப்ரஸாதமாக ஏற்று, வ்யாஸத்தை கடாக்ஷித்து, அனுக்ரஹிக்க வேணுமாய் ப்ரார்த்தித்துக் கொள்கிறேன்.

பகவானுன ஸ்ரீ கண்ணன், மஹாபாரதப் போரின் ஆரம்பத்தில், யுத்த களத்தில், இரண்டு பக்கத்தாருடைய சைன்யங்களுக்கு இடையில் தேர்த்தட்டிலே நின்று தான் ஆசார்யனுகவும் அர்ஜுனனை சிஷ்யனுகவும், ஆசார்யன் சிஷ்யன் என்ற க்ரமத்தில் லோகத்திலுள்ள சகல ஜீவன்களும் தன்னையடைந்து, மறு பிறப்பில்லா மேல் வீட்டை அடையவேணும் என்று திருவுள்ளங்கொண்டு, "பகவத் கீதை" என்கிற உபநிஷதத்தையும், அதன் மெய்ப்பொருளையும், "சரமஸ்லோகத்தின்" வாயிலாக சேதனர்களுக்கு வெளியிட்டருளினுன்.

**சரமஸ்லோகத்தில் உள்ள வகைகள் :**

சரமஸ்லோகம் என்றுல் கடைசீயானதும், முடிவானதும் உள்ள வார்த்தை என்ற பொருள். சரமஸ்லோ'கத்தில் முக்ய மூன்று சரமஸ்லோகங்கள் பிரசித்தமாக இருப்பன. அதில் முதலாவது வராஹ சரமஸ்லோகம். இந்த சரமஸ்லோகம் வராஹ அவதாரத்தில் பெருமாள், பிராட்டிக்குக் கூறியது. ஸ்லோகம் பின் வருமாறு :

**திரு. டி. கேசவ அய்யங்கார்-அல்லூர்.**

ஸ்திதே மனஸி ஸுஸ்வஸ்தே சரீரே
ஸதி யோ நர:
தாது ஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா
விஸ்வரூபஞ்ச மா மஜம்
ததஸ்து ம்ரியமாணந்து காஷ்ட
பாஷாண ஸந்நிபம்
அஹம்ஸ்மராமி மத்பக்தம், நயாமி
பரமாங்கதிம்"

இரண்டாவதாக உள்ளது "ஸ்ரீராம சரமஸ்லோகம்".

சக்ருதேவ ப்ரபன்னுய தவாஸ்மீதி ச
யாசதே |
அபயம் ஸர்வ பூதேப்யோ ததாம்
யேதத் வ்ரதம் மம ||

இந்த சரமஸ்லோகம், ஸ்ரீமத் ராமாயணத்தில், யுத்தகாண்டத்தில், விபீஷண சரணுகதி சமயத்தில் சக்ரவர்த்தி திருமகனுல் திருவாய் மலர்ந்தருளியது.

## வைணவ பரிபாஷை

ஸாதித்தல் - பரிமாறுதல்.

சீதோதகம் - குளிர்ந்த ஜலம்.

ஸ்வாமி என்ன ஸாதித்தது? - தாங்கள் என்ன சொன்னீர்கள்?

ஸ்வாமி திருமாளிகை - தங்கள் வீடு.

ஸ்வாமி தேவிகள் - தங்கள் மனைவி.

ஸ்வாமி ஸாதித்தார் - பெரியவர் சொன்னார்.

ஸ்வாமி நியமனம் - பெரியவர் ஆணை.

தயை - கருணை.

தளிகை - சமையல்.

தந்ததாவனம், தந்தசுத்தி - பல் தேய்த்தல்.

தாயார், பிராட்டி, தேவி - ஸ்ரீ மஹாலக்ஷ்மி.

தத்யோதனம் - தயிர்சாதம்.

ததியர் - திருமால் அடியார்கள்.

தர்ப்பம் - வைதீக கிரியைகளுக்குப் பயன்படும் புல்.

தயிரமுது - மோர், தயிர்.

தன்னடிச்சோதி - பரமபதம்.

மூன்றுவது சரமஸ்லோகம் 'ஸ்ரீகீதா சரமஸ்லோகம்'

சர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம்
சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுக: |

இந்த சரமஸ்லோகம், ஸ்ரீமத் மகா பாரதத்தில், ஸ்ரீமத் பகவத்கீதையில் பகவானான ஸ்ரீ கண்ணபிரானால் கூறப்பட்டது. பெருமாளால் பிராட்டிக்குக் கூறப்பட்ட வராஹ சரமஸ்லோகம் முக்யமாக கருதப்பட்டிருந்தாலும், ஸ்ரீ ராமச்சந்திரனால் ஸ்ரீராம சரமஸ்லோகம் சொல்லப்பட்டிருந்த போதிலும், நம் பூர்வாசாரியர்களனைவரும், வராஹ சரமஸ்லோகத்தையோ, ஸ்ரீராம சரமஸ்லோகத்தையோ அனுஸந்திக்கவில்லை. மாறாக குரு சிஷ்யன் என்ற க்ரமத்தில் ஸ்ரீ கிருஷ்ணனால் கூறப்பட்ட ஸ்ரீ 'பகவத்கீதா' சரமஸ்லோகத்தையே, மிகவும் ஸாரதமமாய் இருப்பதாகக் கருதி, உபதேசித்துள்ளனர் நம்பூர்வாசாரியர்கள். இந்த ஸ்ரீ கீதா சரமஸ்லோகமே ரகஸ்யத்ரயத்தில் மூன்றுவதும் கடைசியாகவும் உள்ளமகாமந்த்ரமாகும்.

மந்த்ரோபதேசம் :

பெரிய பெருமாள் தொடங்கி, நம் ஆசார்ய பர்யந்தம், ஓராண் வழியாக உபதேசம் பெற வேண்டிய ரகஸ்ய மந்த்ரமாகும். எனவே இந்த சரமஸ்லோகமும், "திருவெட்டெழுத்து", "த்வயம்" போலவே, சதாசார்யன் மூலமாக உபதேசம் பெற வேண்டிய காலக்ஷேப க்ரந்தமாக நியமனம் செய்துள்ளனர். ஆசார்யனும், தகுந்த சிஷ்யனுய், பாத்ரமறிந்தே ரகஸ்யத்ரயத்தையும், இதன் அர்த்த விசேஷங்களையும் உபதேசிக்கவேணும் என்று பூர்வாசாரியர்கள் நியமனம் செய்துள்ளனர். இங்கு நம் ஞாபகத்திற்கு வருவது யாதென்றல், இந்த சரமஸ்லோகத்தின் அர்த்த விசேஷங்களையெல்லாம் அறியும் பொருட்டு, நம் தர்சன ஸ்தாபகாசார்யரான ஸ்ரீமத் ராமானுஜர், திருக்கோட்டியூருக்கு 18 தடவை சென்றும், பல இன்னல்களையும், சோதனைகளையும் தாங்கி, மாஸோபவாசம் கொண்டு, கடைசியாக, ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பிகள் எம்பெருமானுர்க்கு, சரமஸ்லோகத்தின் எல்லா அர்த்த விசேஷங்களையும் உபதேசித்தருளினார் என்று குருபரம்பராப்ரபாவம் தெரிவிக்கிறது. இதிலிருந்து இம் மகாமந்த்ரத்தின் சீரிய ஏற்றம் தெளிவாகிறது. நம் போன்ற சாதாரண மானிடர்கள் படும் துயர் கண்டு பொறுக்கமாட்டாமல், இம் மந்திரத்தின் சீரிய பொருளை, ஆசையுடையோர்களுக்கெல்லாம் உபதேசித்தார் எம்பெருமானர். தானும் கத்யத்தில் அனுஷ்டித்துக் காட்டினர்.

சரமஸ்லோகத்தை விவரிக்கும் நூல்களும் நூலாசிரியர்களும் :

ரகஸ்யத்ரயங்களின் பொருளையும் இதன் அர்த்த விசேஷங்களையும் பரமகாருணிகரான "ஸ்ரீ பிள்ளை லோகாசார்யர்" "முமுக்ஷுப்படி" என்ற தமிழ் சூத்திரங்களாலாகிய ஒரு நூல் இயற்றியுள்ளார். இதில் சரமஸ்லோகப்ரகரணம் என்று 92 சூத்திரங்களினுல் அருளிச் செய்துள்ளார். ஸ்ரீகூரத்தாழ்வான் திருக்குமாரராகிய ஸ்ரீ பட்டரும், "அஷ்டஸ்லோகி" என்ற சிறு நூலில் கடைசீ மூன்று ஸ்லோகங்களில் சரமஸ்லோகத்தின் பொருளை மிக சுருக்கமாக வெளியிட்டுள்ளார். ஸ்ரீமத்நிகமாந்த மஹாதேசிகன், "ரகஸ்யத்ரய ஸாரம்" என்று 32 அதிகாரங்களைக் கொண்ட ஒரு க்ரந்தம் மணிப்ரவாள நடையில் அருளிச் செய்துள்ளார். இதில் 29வது அதிகாரம் "சரமஸ்லோகாதிகாரம்". தவிர ஸ்வாமிதேசிகன், ரகஸ்யபதவி, ரகஸ்யமாத்ருகை, ரகஸ்யத்ரயசுளகம், ஸாரஸாரம் முதலிய க்ரந்தங்களிலும் அங்கங்கே, சரமஸ்லோகத்தின் அர்த்தங்களை வெளியிட்டுள்ளார். ஸ்வாமி வேதாந்ததேசிகன் "சரமஸ்லோக சுருக்கு" என்று 11 பாசுரங்களைத் தனித் தமிழ் ப்ரபந்தமாக அருளிச் செய்துள்ளார். இது தவிர ஸ்ரீ வேதாந்தாசாரியர், "அம்ருதரஞ்சனி", "அதிகாரஸங்க்ரஹம்", "திருசின்னமாலை" ஆகிய

தமிழ் ப்ரபந்தங்களிலும் பல இடங்களில் சரமஸ்லோகத்தின் அர்த்த விசேஷங்களை அருளிச் செய்துள்ளார்.

மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் நம்மாழ்வார் அருளிய, "பெரிய திருவந்தாதி" பொய்கையார் அருளிய, "முதல் திருவந்தாதி", பூதத்தார் அருளிய, "இரண்டாம் திருவந்தாதி", பேயார் அருளிய, "மூன்றும் திருவந்தாதி", திருமழிசைப்பிரான் அருளிய, "நான்முகன் திருவந்தாதி", நம்மாழ்வார் அருளிய, "திருவிருத்தம், திருவாசிரியம்", திருமங்கையாழ்வார் அருளிய, "சிறிய திருமடல், பெரிய திருமடல், திருவெழுகூற்றிருக்கை" ஆகிய பத்துப்பிரபந்தங்கள் அடங்கிய "இயற்பா" என்னும் மூன்றாவது ஆயிரம் சரமஸ்லோகத்தின் விவரணம் என்று ஸம்ப்ரதாயம் வல்ல வைணவ பெரியோர்களும் கூறியிருக்கின்றனர். இனி சரமஸ்லோகத்தின் பொருள் சுருக்கத்தைக் காண்போம் :

"ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம்
சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுக:"

இது ஸ்ரீபகவத் கீதா சரமஸ்லோகமாகும். இது பகவத்கீதையின் கடைசி அத்யாயமான 18வது அத்யாயத்தின் 66வது ஸ்லோகமாகும். இது பகவானான ஸ்ரீ கண்ணனால் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டது. இந்த ஸ்லோகத்தின் சாமான்ய பொருளாவது :— "எல்லா தர்மங்களையும் விட்டு, என்னை ஒருவனையே சரணமாக அடை, நான் உன்னுடைய எல்லா பாபங்களையும் போக்கி, மோக்ஷத்தை அளிக்கிறேன் கவலையடையாதே" என்பதே.

நாம் இங்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டிய முக்யமானது என்னவெனில், த்வயத்தின் விவரணமே "சரமஸ்லோகம்" என்பது.

இனி அர்த்த விசேஷங்களைச் சிறிது காண்போம். மூன்றாவது ரகஸ்யமான சரமஸ்லோகம் எம்பெருமானை உபாயமாக பற்றும் வகையையும், அவ்விதம் உபாயமாகப் பற்றப்பட்ட எம்பெருமான், உபாயமாக பற்றின சேதனர்களுக்கு செய்யும் பலனையும், பலனுக்கு வரும் இடையூறுகளையும் தானே நீக்கிப் பேரின்பத்தைத் தருகிறான் என்பதாகும். பாற்கடலில் பள்ளி கொண்டிருந்த பரமன் அதை விட்டுப் பூவுலகில் மானிடனாய் அவதாரம் செய்து பசு, பக்ஷி முதலிய விலங்கினங்களுக்கும், மானிடர்களுக்கும், எளியோனாக சௌலப்யமாய் இருந்து, துஷ்ட நிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம் செய்தான். பாரத யுத்தத்தில் கலக்கமடைந்திருந்த அர்ஜுனனைத் தேற்றி, உற்சாகப்படுத்தி, கீதை என்கிற உபநிஷதத்தையும், அதன் ஸாரமான ஆத்ம, பரமாத்மஸ்வரூபம், உண்மையான ஸ்வரூபம் முதலியவைகளைக் கூறி, மோக்ஷமாகிற மேல் வீட்டை அடைவதற்கு ஒரு வகையில், உபயோகமாக இருக்கும் கர்ம யோகம், ஞானயோகம், பக்தியோகம், அவதார ரகஸ்ய ஞானம், புருஷோத்தம வித்யை, ப்ரம்ஹவித்யை முதலியவைகளைக் கூறினான். இவைகளைச் சேதனர்கள் சுலபமாகக் கைக் கொள்ள முடியாமல் இருப்பதாலும், தவிர மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு, இது விரைவில் பலனைக் கொடுக்காதாகையாலும், பக்தி யோகத்தை பின்பற்றுவது கஷ்டமானதாகவும் நியமங்கள் இருப்பதாலும் பரம க்ருபையுள்ள பரமன் எல்லாரும் சுலபமாகக் கைக்கொள்ளக்கூடிய ப்ரபத்தியோகமாகிற சரணாகதியை தெளிவாகக் கூறினான். ப்ரபத்தியை யார் வேண்டுமானாலும், எந்த சமயத்திலும், எந்த நிலையிலும் செய்யக்கூடியதாக இருப்பதே இதன் ஏற்றத்திற்கு காரணமாகிறது. இந்த ப்ரபத்தி யோகம் வேதங்களிலும் கூறப்பட்டு ஆழ்வார்களும், பூர்வாசார்யர்களும், தங்கள் அருளிச் செயல்களிலும் அனுஸந்தானம் செய்து காட்டியுள்ளனர். இங்கு ஸ்ரீபிள்ளை லோகாசாரியர் ப்ரபத்தியைப் பற்றி, "ஸ்ரீவசன பூஷணம்" என்னும் க்ரந்தத்தில், "ப்ரபத்திக்கு தேச நியமமும், கால நியமமும், ப்ரகார நியமமும், அதிகாரி நியமமும் இல்லை. ப்ரபத்தியாகிற விஷய நியமமே உள்ளது. விஷய நியமமாவது, குணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே" என்று அருளிச் செய்துள்ளார். ஸ்ரீமத் பாஷ்யகாரரும் தமது ஸ்ரீ பாஷ்யம், கத்யம் முதலிய க்ரந்தங்களில் ஸ்ரீரியப்பதியான எம்பெருமான் திருவடிகளில் பரமப்ரீதியுடன் செய்யும் கைங்கர்யமே பரம புருஷார்த்தம், மோக்ஷம் என்றும், அதற்கு சாதனம் பக்தியோடு சேர்ந்த ப்ரபத்தியே என்று அருளியிருக்கிறார்.

சரமஸ்லோகத்தின் முதல் பாதி, உபாயத்தைச் சொல்லுகிறது; பின் பகுதி, பலனைக் காட்டுகிறது. தவிர விதியைக் காட்டுகிறது என்போர் பெரியோர். இதன் காரணமாகவே சரமஸ்லோகத்திற்கு, "விதி ரகஸ்யம்" என்று பெயர் ஏற்பட்டது. அதாவது ஒரு காரியத்தை செய் என்பது கட்டளையாகும். பொதுவாக கட்டளையிடும்போது, அதற்குப் பலன் இல்லாமற்போனால், அக்கட்டளையை யாரும் செய்ய விரும்பமாட்டார்கள். ஆகையால் பலனைக் கூறும் வாக்யம், விதி இவைகளுக்கு அனுகுணமாக இருப்பது ப்ரபத்தி ஆகும்.

ப்ரபத்திக்கு முக்யமாக இருக்க வேண்டியது ஒருவனுடைய ஊக்கமும், முயற்சியுமே. இக்கருத்தையே ஸ்ரீ பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படி சரமஸ்லோக ப்ரகரணத்தில் 90ம் சூத்திரத்தில், "வ்யவஸாயம் இல்லாதவனுக்கு இதில் அன்வயம் ஆமத்தில் போஜனம் போலே"

(28-ம் பக்கம் பார்க்க)

# சித்திரத் திருப்பாவை



## 17. உலகளந்த உம்பர் கோமானே!

"திருநிறை பெருவாழ்வில், பருகிட அமுதமன்ன நீரையும், ருசியோடு உண்டு மகிழ்ந்திட சத்தான சோற்றினையும், மகிழ்ந்து களித்திட முத்தான ஆடை அணிமணிகளையும் போதும் போதும் என்று பகரும் வண்ணம், அள்ளி அள்ளித் தந்து—மனம் திருப்தி அடையும் வரை தருமஞ் செய்கின்ற எமது தலைவரே! நந்தகோபலரே! அருள் கூர்ந்து எழுந்திருப்பாயாக! மலர்ந்து பூத்துக்குலுங்கும் புஷ்பங்களை உடைய கொடிகளைப் போன்ற மங்கையர்களுக்கெல்லாம் கொழுந்து போன்றவளே! பிறந்து சீரும் சிறப்புடனும் வளர்ந்து, பேறும் புகழும் பின் தொடர, புகுந்த குலத்துக்கு, புகுந்த வீட்டிற்கு, பெருமையும் செல்வத்தையும் அளிக்கும் மங்கள விளக்கே! எமது தலைவியே! யசோதையே! அன்பு கூர்ந்து துயிலுணர்ந்து எழுந்தருளுவாயாக!

விண்ணையும் மண்ணையும் பிளந்தளந்த தேவாதி தேவனே! திருவருள் கூர்ந்து உறங்காமல் எழுந்தருள்வாயாக! பசும் பொன்னால் செய்யப்பட்ட செம்பொன் வீரக்கழல் அணிகளை தம் திருவடிகளில் அணிந்துள்ள செல்வனுகிய எங்கள் செல்வமே பல தேவனே! உறங்கியது போதும். எழுந்திரு! எழுந்து உன் கண் போன்ற உன் தம்பி கண்ணனை இன்னும் உறங்காமல் எழுந்திருக்கச் செய்வாயாக!" என்று நந்தகோபலரையும், அவருடைய இல்லத்தரசி யசோதாவையும், அவர்களது செல்வங்களாகத் திகழும் பலதேவனையும், தம்பி கண்ணனையும் எழுப்புகின்ருள் ஸ்ரீ கோதையாள்.

அம்பரமே, தண்ணீரே, சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான் நந்தகோ பாலா! எழுந்திராய்!;
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறாய்!
அம்பரம் ஊடறுத் தோங்கி உலகளந்த
உம்பர்கோ மானே! உறங்கா தெழுந்திராய்!
செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்!

நந்தகோபனுடைய அரண்மனைக்குள்ளே அனைவருடனும் வந்ததும் பெரிய காரியமல்ல ..வெண் முழுமதி தண்ணொளி பொழிந்திட, கடுங்குளிர் மேகங்களுடன் போட்டியிட்டுப் பெய்யும் பனி நிறைந்த இம்மார்கழித் திங்கள் முதல் திருநாள் விடியற்காலை அன்றே ஸ்ரீ கண்ணபிரானை எழுப்பி அவன் திருவருள் பெற்றிட வேண்டும் ... இதுதான் பெரிய காரியம்... இதற்கு என்ன செய்வது?

பெரியவர்களிடம் அனுமதி பெற வேண்டாமா? 'தலைவா' என்றழைத்தால் அதில் சிறப்பிருக்காது... அவர் செய்த திருப்பணிகளை எடுத்துக் கூறுவதில்தான் பெரும் சிறப்பிருக்கிறது எனவே, இப்பாசுரத்தின் முதல் வரியிலேயே நந்தகோபாலரின் கொடைச் சிறப்பை எடுத்துக் கூறுகிருள் கோதை. உலகு உயிர்களுக்கு வேண்டியவை என்ன? .. உயிரை நிலை நிறுத்திட பருக 'நீர்', புசித்திட அறுசுவைச் சோறு, அணிந்து மகிழ்ந்திட ஆடைகள்...இவற்றை அள்ளித் தந்தவர் நந்தகோபர் ஆவர். இந்நங்கையர்களின் வேண்டுகோளையும் ஏற்று உதவுவார் என்பது உட்கரு.

'ஒரு செடியின் அடிப்பாகத்தில் ஒரு கேடு வந்தாலும் அதன் கொழுந்தில்—தளிரில்—ஒரு வாட்டம் தோன்றிவிடும். அவ்வாறே மங்கையர்களுக்கெல்லாம் ஒரு சிறு குறை வந்தாலும், உன் முகம் அன்றோ வாடும், உடனே அக்குறையினைப் போக்குவாய் அல்லவா' இக்கருத்தையே 'கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே!' என்னும் தொடரில் குறிப்பிடுகின்ருள். 'எங்கள் குறைகளை நீ அறிந்தால் எங்களுக்கு ஒரு குறைவுதான் உண்டோ' என்பதையே 'அறிவுறாய்' என்னும் சொல்லில் விளக்குகிருள்.

குருவின் துணைக்கொண்டு-திருமந்திரத்தின் கருப்பொருளை உணர்ந்து, எம்பெருமானுக்கு அந்தரங்கமானவர்களை முன்னிட்டு இறைவனை துயிலுணர்த்துதலே இப்பாசுரத்தின் கருப்பொருளாகும். ஆன்மா பெற வேண்டிய இறைவனின் முக மலர்ச்சியான திருவருள் 'அம்பரம்' ஆகும். இதை வளர்க்க வல்ல மனோநிலையே 'தண்ணீர்', 'சோறு' அதாவது பகவானுக்காகச் செய்யும் 'கைங்கர்யம்'. ஆக இம்மூன்றையும் அளிக்க வல்லவனை 'நந்தகோபனே' ஆசாரியன்—குரு ஆவார். 'நான் உன்னைபற்றி விட்டேன்; உன்னை விடமாட்டேன்' என்று கோதையின் கருத்திற்கு ஒப்பவே—

அத்தா அரியே என்று உன்னை அழைக்க
பித்தா என்று பேசுகின்ருர் பிறர்என்னை
முத்தே! மணி மாணிக்கமே! முளைக்கின்ற
வித்தே! உன்னை எங்ஙனம் நான் விடுகேனே!'

என்று திருமங்கையாழ்வாரும் போற்றித் துதிக்கின்ருர்.

# 18. நப்பின்னை நாயகனே!

"திருவே! எழில் வடிவே! மதநீரைப் பெருக்குகின்ற வலிமையும் வளமையும் உடைய அந்த யானையைப் போன்ற வீரமும், கம்பீரமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற எம் தலைவனைத் திகழக் கூடிய, எதிரிகளைக் கண்டு பின் வாங்காத, வெற்றியை மட்டுமே பெறும்தோள் வலிமை உடையவனுமாகிய நந்தகோபாலருடைய திருநிறை மருமகளே! நலம் திகழ் கருங் கூந்தலை உடையவளே! கெண்டை விழியால் கண்ணுற்று—கண்ணிமை மலர்ந்து—வண்ணச் சீரடிப் பெயர்த்து எழுந்து வந்து கதவைத் திறப்பாயாக!

அதிவிடியற்காலை என்றுணர்ந்த சேவல்களும் இங்கே வந்து கூவுகின்றன... அதுமட்டுமா? வாசலில் அமைந்துள்ள அழகான குருக்கத்திச் செடிகளாலும், மாதவிக் கொடிகளாலுமான மரகதப் பச்சை பந்தலின் மேலே கருங்குயில்கள், இன்னமுதைக் காற்றிடைக் கலந்தது போல் குக்கூ... குக்கூ...வென்றே பலமுறை கூவும் குரல் கூடவா உன் துயிலினை எழுப்பவில்லை! பந்து பொருந்திய கை விரல்களைப் பெற்றவளே!

உன் கண்ணன்ன கணவனை கண்ணனுடைய திருநாமங்களை நீ மட்டுமே போற்றித் தனியாகத் துதிக்கின்றதை விடுத்து, உன்னுடன் நாங்களும் சேர்ந்து பாடி வணங்கும்படி நீ திருவருள் செய்க. அதற்கு என்ன செய்ய வேண்டும்? நீ அகமகிழ்ந்து—உளம் உகந்து—பொன்னால் செய்யப்பட்ட வளையல்கள் குலுங்கி ஒலிக்க—மயிலென அசைந்து......... உன் கணவனைக் கண்ணனை நீங்கி எழுந்து வந்து செந்தாமரைப் போன்ற உன் செவ்விளம் பூவிரல்களால் கதவைத் திறப்பாயாக!'—என்று ஸ்ரீகோதை ஸ்ரீகண்ணனை எழுப்பக் காரணக் கர்த்தாவாக உள்ள நப்பின்னையை எழுப்பிக் கதவைத் திறக்கக் கனிவோடு வேண்டுகிறாள்.

உந்து மதகளிற்றன், ஓடாததோள் வலியன்,
நந்த கோபாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்!
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண்; மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவின காண்!
பந்தார்விரலி! உன் மைத்துனன் பேர் பாடச்
செந்தாமரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்!

வட பாரதத்தில், "ராதை"க்கு—கண்ணனிடம் அளித்துள்ள—அன்னியோன்னியத்தை-ஒருயிர் ஈருடலான உறவினை—இங்குள்ள இலக்கியங்கள் 'நப்பின்னை பிராட்டிக்கு' அளித்துள்ளன. பிராட்டி இல்லாமல் பெருமானை ஸேவிப்பது நம் நாட்டு மரபு அல்ல. எல்லா சக்திகட்கும் மூலசக்தியாய்—ஆதாரச் சக்தியாய் விளங்கும் 'சக்தி'யையே எம்பெருமானுக்கேற்ற—எம்பெருமானுடன் இரண்டறக் கலந்த எம்பெருமாட்டியாக போற்றி வணங்குகிறோம். பிராட்டியின் துணை இல்லாமல் கண்ணனின் கருணையை- திருவருளைப் பெற முடியாது என்பது கோதையின் உட்கருத்து ஆகும்.

மற்ற 'பாவை'—தோழிகளையெல்லாம் 'கீசுகீசு என்று எங்கும் ஆனைச் சாத்தம் கலந்து பேசுகின்றன' என்றும், சோலைப் பறவையெலாம் சூழ்ந்து பரவசமாய் சப்திக்கின்றன என்றும் கூறி துயில் எழுப்பினாள். ஆனால் இங்கோ—'குயிலினங்கள் கூவின காண்' என்கிறாள். ஏன்? 'குக்கூ.... குக்கூ.... கூ.... கூ....' என்று குயில் கூவும் பொழுது அத்தொனியின் இனிமை—இன்பத்தேன் வந்து வாயினில் பாய்வது போன்ற இன்பத்தைப் பெருக்குகிறது. குயிலின் நிறமோ கருமை; கண்ணனின் திருமேனியும் கருமை. குயிலின் குரல் அளிப்பது இன்பம், இனிமை; அவ்வாறே கண்ணபிரானின் கண் மலர்ந்து, கடைக் கண்ணால் கண்ணுற்றாலே போதும்—சீர், சிறப்பு, செல்வம், பேர் புகழ் பெருமை—தனம் தான்யம் ஐஸ்வரியம்—ஆரோக்கியம் ஆனந்தம் இன்பம்—நீர், நிலம், வளம் ஆகியவை பொங்கிப் பெருகும்.

பச்சைப் பசேல் என்று திகழும் மாதவிப் பந்தல் போன்றே கண்ணனின் மனமும் பசுமையாகத் திகழ்ந்து, பாரிலுள்ள உயிர்கள் அனைத்தையும் சேர்த்து அணைக்கிறது என்பது உட்கருத்தாகும்.

இப்பாசுரத்தின் கருத்தை ஒப்பவே நம்மாழ்வாரும்,

பணி நெஞ்சே நாளும் பரம பரம்பரனை
பிணி ஒன்றும் சாரா பிறவி கெடுத்து ஆளும்
மணி நின்ற சோதி மதுசூதன் என் அம்மான்
அணி நின்ற செம்பொன் அடல்ஆழி யானே!

என்று இருதய மலர, கரமது மொட்டித்துக் கண்களிகூற, நுண் துளி அரும்ப போற்றுகின்றார் பரமனை.

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

என்கிறார். எதிலும் முயற்சியும் ஊக்கமும் இல்லாதவன், அஜீர்ண மாய் இருக்கும்போது ஒருவன் சாப் பிட்டால் என்னவாகுமோ அதுபோல என்பது.

ஸர்வதர்மான் பரித்யஜ்ய என்ற பதங்களுக்கு, 'எல்லா தர்மங்களேயும் விட்டு' என்பது பொதுவான பொருள் இங்கு எல்லா தர்மங் களேயும் விட்டு என்று சொல்லும் போது தர்மங்கள் யாவை என்று தெரிந்துகொள்ள வேணும். தர்மம் என்பதை பல சாஸ்த்ரங்கள் மூல மாக அறிந்து கொள்ள வேண்டிய, புருஷர்த்தங்களுக்கு உபயோகமாக எது இருக்கிறதோ அதுவே தர்மம் எனப்படும். பல சாஸ்திரங்களில் பல தர்மங்கள் புருஷார்த்தங்களேப் பெறுவதற்கு வழிகாட்டியாகக் கூறி யிருப்பதையே இங்குக் குறிக்கும். தவிர எல்லா (ஸர்வ) என்ற பதம், எல்லா தர்மங்களேயும் என்று கூறு வது, அந்தந்த தர்மங்களுக்கு அங்கங் களாக இருப்பதையே சேர்த்துக் கூறு கிறது என்று பொருளாகும். தவிர "ஸர்வதர்மான் பரித்யஜ்ய" என் பது, கர்ம யோகத்தையோ, பக்தி யோகத்தையோ, ஞானயோகத் தையோ, மோக்ஷத்திற்கு உபாயமாக இருப்பதை எடுத்துக்கொண்டு என்று தான் பொருளே. தவிர வேத விதி களில் கூறப்பட்டுள்ள ஸ்வதர்மங் களேயும், அனுஷ்டானங்களேயும், நித்ய, நைமித்திய கர்மாக்களே விட்டு என்று அர்த்தமாகாது. பக வானுன ஸ்ரீகண்ணனும் அவ்வாறு கூறவில்லே. அவரவர்களுக்கு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கட மைகளேக் கைவிடாது சரி வர செய்ய வேண்டும் என்பதைச் சுட்டிக் காட் டவே ஏற்பட்டது பகவத் கீதை. கீதையின் இரண்டாம் அத்யாயம் 47ம் ஸ்லோகத்தில், "கர்மண்யே வாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன| மாகர்ம பலஹேதுர்பூமா தே ஸங் கோஸ்த்வகர்மணி" என்று கண் ணன் கூறியிருக்கிறுன். அதாவது 'கர் மாக்களே விடாமல் செய்வதில்தான் உரிமை இருக்கிறதே தவிர, பலனில் இல்லே, பலனே எதிர்பார்த்து செய் யாதே, கர்ம பலன்களே அடை வதையே காரணமாகக்கொண்டு, கர் மாக்களேச் செய்யக்கூடாது, அதனுல் நீ கர்மாக்களேச் செய்யாமலும் இருக் காதே' என்கிறுன் கண்ணன். தவிர 18ம் அத்யாயம் 5வது ஸ்லோகம்,

"யஞ்ஞம் தாநம் தப கர்ம ந த்யாஜ்யம்
கார்யமேவ தத்
யஞ்ஞோ தாநம் தபஸ்சைவ
பாவநாநி மநீஷிணும்"

என்றும், 18ம் அத்யாயம் 6வது ஸ்லோகம்,

"ஏதாந்யபி து கர்மாணி ஸங்கம்
த்யக்த்வா பலாநி ச
கர்த்தநியானீ மே பார்த்த
நிஸ்ச்சிதம் மதமுத்தமம்".

என்றும் கூறுகிறது கீதை. அதாவது யஞ்ஞம், தானம், தபஸ் முதலிய கர்மாக்களே விட்டுவிடக் கூடாது. இவைகள் நம்மை உத்தம மான வழியில் கொண்டு செல்லக் கூடியன. ஆனுல் இவைகளேப் பற்றில் லாமலும், பலனே எதிர்பார்க்காம லும் உத்தமமாக செய்ய வேண்டும் என்பதே, நான் நிச்சியமாய் சொல் லும் உத்தமமான முடிவு. இது தவிர 18ம் அத்யாயம் 65ம் ஸ்லோ கம் :

"மன்மனு பவ மத்பக்தோ மத்யாஜி
மாம் நமஸ்குரு
மாமே வைஷ்யஸி சத்யம் தே பிரதி
ஜானே ப்ரியோஸிமே"

என்று கூறுகிறது.

இதன் பொருள 'ஹே அர்ஜுன, உன் மனதை என்னிடத்திலேயே வை. என்னேக் குறித்தே பக்தி செய். என்னே வணங்கு, என் கார்யத் தையே சாதனமாகவும் செய்து வந் தால் என்னே அடைவாய். இது சத் யம். இவ்விதம் உனக்கு ப்ரதிக்ஞை செய்கிறேன். நீ எனக்கு ப்ரியமான வனல்லவா' என்கிறுன் கண்ணன். பகவானுக்கு "பற்றற்றுன்" என்ற பெயருமுண்டு. அவன் பாதத்தை (பற்றை) பற்றிக்கொண்டாலே நம் மனத்திலுள்ள பற்றெல்லாம் பறந்து விடும். இக்கருத்தையே தெய்வப் புலவரான திருவள்ளுவரும் துறவு அதிகாரத்தில் 350வது குறளில்,

"பற்றுக பற்றற்றுன் பற்றினே
அப்பற்றை
பற்றுக பற்று விடற்கு"

என்கிறார். இதையே நம்மாழ்வாரும்,

"அற்றது பற்றெனில் உற்றது வீடுஉயிர்
செற்றது மன்னுறில் அற்றிறை
பற்றே"

இப்பாசுரத்திலேயே சர்வதர்மான் பரித்யஜ்ய என்பதின் பொருள் அடங்கியுள்ளது என்பர் நம் பெரி யோர். மேற்கூறியவைகளிலிருந்து கண்ணன் வேதவிதிகளில் கூறப்பட் டுள்ள கர்மாக்களேயோ, சாஸ்த்ரங் களில் உள்ள ஆஞ்ஞை, அனுக்ஞை, என்ற கட்டளேகளிலுள்ள 'சந்த்யா வந்தனம்" போன்ற நித்யகர் மானுஷ்டக்களே விட்டுவிட்டு, ப்ர பத்தி செய் என்பதான அர்த்தம் எடுத்துக்கொள்ளக் கூடாது. சாஸ் தரங்களில் கூறப்பட்டுள்ள தர்மங் களேயும், ஆஸ்ரம தர்மங்களேயும், ப்ர பத்தி செய்கிறவனும் அவஸ்யம் செய்யத்தான் வேணடுமென்பதே "ஸர்வதர்மான் பரித்யஜ்ய" என்ப தற்குப் பொருளாகும்.

(அடுத்த இதழில் முடியும்)



# ஸாம வேதத்தின் பெருமை

பரமேச்வரனுக்கு ஸாமவேதத்தில் தான் அதிக அன்பு. இராவணன் கூட ஈசனின் மனதை உருக்க ஸாம கானமே செய்தான். திருமாலுக்கும் மிகவும் உகந்தது ஸாமமேயாகும். ஸாம வேதத்தை ஸங்கீத ஸாமம் என்றே கூறுவர். ஸங்கீதத்திற்கு மூன்று ஸ்தாயிகள் போன்று ஸாம ஸ்வரத்திற்கு ஸ்தானங்கள் மூன்று. ஒவ்வொரு ஸ்தானத்திலும் ஸங்கீதம் போன்றே ஏழு ஸ்வரங்கள் உண்டு. ஒவ்வொரு ஸ்வரத்திற்கும் சுருதியை அறிந்து கானம் செய்ய வேண்டு மென்று நாரதர் கூறுகிறார். ஸாம கானம் செய்கிறபோது காலத்தையும் அறிந்து கொள்ள வேண்டும்.

காலங்கள் மூன்று: அவையாவன: (1) ஹ்ரஸ்வம்-ஒரு மாத்திரை காலம் (2) தீர்க்கம்-2 மாத்திரை காலம், (3) விருத்தம்-ப்லுதம்-3 மாத்திரை காலம். ஒவ்வொரு எழுத்தின் காலத்தைத் தெரிந்து கொண்டு கானம் செய்ய வேண்டுமென்று வரருசி கூறுவார். இது தவிர பரிசம், அந்தஸ்தை, ஊஷ்மை, விபஞ்சனம், ஸ்வரம், ஸம்யோகம், யமம், அனந்த்யம், அந்த்யம், த்விர்பாவம், வர்க்கம், உபத்மானீயம் ஜிஹ்வாமூலம், விஸர்ஜனீயம், அனுஸ்வரம் என்ற பதினேந்திற்தம் மேற்பட்ட உச்சரிப்பு ரகசியங்கள் ஸாம வேத உச்சரிப்பில் கூறப்படுகின்றன.

இனி ஸாம வேதம் எவ்விதம் பரவிற்று என்று காண்போம். ஜைமினி முனிவருக்கு சுமந்தன் என்றொரு மகன் உண்டு. அவனுக்கு சுனவாம்ஸ்தன் என்ற மகன். இவ்விருவருக்கும் ஜைமினி ரிஷி ஸாமத்தை உபதேசித்தார். இவர்களது சீடனை சுகர்மா என்பவன் ஸாமவேத ஸாரத்தை 1000 ஸம்ஹிதைகளாகச் செய்தான். சுகர்மாவின் சீடர்களான ஹிரண்ய நாபன், பௌஷ்யஞ்ஜனன், அவந்தன் என்பவர்கள் இதைக் கற்றனர். பௌஷ்யஞ்ஜனனுக்கு லௌகாட்சி, மாங்கலீ, குல்யன், குசிதன், குட்சீ எனப் பல்வகைச் சீடர்கள் உண்டு. ஹிரண்ய நாபனின் சீடன் கிருதன் 14 வகை ஸம்ஹிதைகளைக் கற்பித்தான். அவந்தன் தன் சீடர்களுக்கெல்லாம் மிகுதியான ஸம்ஹிதைகளை அறிவித்தான். இவ்விதம் ஸாம வேதம் பரவியது.

வேத மொழிகளைச் சொல்வதிலும் அனுசரிப்பதிலும் சில வேற்றுமை போல் உள்ள பேதங்கள் ஏற்பட்டன. இவைகளையே சாகைகள் என்பர். தற்கால ஸாம வேதத்திற்கு மூன்று சாகைகளே உண்டு. அவை கௌதம சாகை, ராணுயனீய சாகை, ஜைமினீய சாகை என்பனவாகும். குஜராத்திலும், தென்னாட்டிலும் கௌதம சாகையைப்பின்பற்றுபவர்கள் உண்டு. ஆனால் இதை அனுஷ்டிப்பவர்கள் குறைந்து கொண்டே வருகின்றனர். ராணுயனீய சாகையை மஹாராஷ்டிரத்தில் பெரும்பான்மையினரும், தமிழ்நாட்டில் சிலரும் அனுஷ்டிக்கின்றனர். ஜைமினீய சாகை கர்நாடகம் ஆந்திரப் பகுதிகளில் அதிகம் வழக்கத்தில் உள்ளது. சென்ற நூற்றுண்டிலேயே டாக்டர் கைலண்ட் என்பவர் இதை இங்கிலாந்தில் ஒரு ஆய்வுக் கட்டுரை மூலம் பதிப்பித்துள்ளார்.

**திரு. பி. சுந்தரராமன்,** M.A., B.Ed.
பழமார்னேரி.

ஸாம வேதம் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு பூர்வார்சிகம், உத்தரார்சிகம் என்று அழைக்கப்படுகின்றது. பூர்வார்சிகத்திற்குப் பிர

## வைணவ பரிபாஷை

கத்யத்ரயம்-சரணாகதி, ஸ்ரீரங்க, ஸ்ரீவைகுண்ட கத்யங்கள்.
கரியமுது-பக்குவம் செய்யப்பட்ட காய்கறி.
கடாக்ஷிக்கவேணும்-பார்க்க வேண்டும்.
காலாதீதம்-காலம் கடந்தது.
கிரமம்-வரிசை, முறை.
கீதாசாரியன்-கிருஷ்ணன்.
குலசேகரப்படி-சந்நிதியில் கர்பகிருஹத்திற்கு வாசல்படி.
குமாரன்-மகன்.
கைங்கர்யம்-பகவானுக்கோ பாகவதர்களுக்கோ செய்யும் தொண்டு.
கோயிலாழ்வார்-மரத்தாலான கோயில் போன்ற பெட்டி.
கோளரி-நரசிங்கம்.
க்ருஷ்ணாஜினம்-மான்தோல்.
சதுரன்-கெட்டிக்காரன்.
சாற்றமுது-ரசம்.
சாற்றுமறை-முடிவு பாசுரங்களை அநுசந்தித்தல்.
ஸேவாகாலம்-திவ்ய பிரபந்த அநுஸந்தானம்.
சாற்றுபடி-பகவானுக்குச் செய்யும் அலங்காரம்.
ஸ்தல சுத்தி-சாப்பிடும் இடத்தை சதுரமாக சுத்தம் செய்வது.

# வைணவ பரிபாஷை

அகம் - இல்லம்.
அடிசில் - உணவு.
அக்கார வடிசல் - திருக்கண்ணமுது.
அத்யன உற்சவம் - பகல்பத்து, இராப்பத்து உற்சவம்.
அத்யாபகர் - ஆசிரியர்.
அத்யாபகர்கள் - திவ்யப்பிரபந்தம் அனுசந்திப்போர்.
அமுதுபடி - அரிசி.
அமுது செய்தல் - பெரியோர் உண்ணுதல்.
அதிதி - விருந்தினர்.
அருளிச் செயல் - நாலாயிர திவ்யப் பிரபந்தம்.
அடைக்காய் - வெற்றிலைப்பாக்கு.
அற்பசங்கை - சிறுநீர் கழித்தல்.
அவப்ருதஸ்நானம் - தீர்த்தவாரி.
அம்மான் - மாமா.
அடியேன் - நான்.
ஆண்டு நிறைவு - பிறந்த நாள்.
அயோனிஜர் - கர்பவாஸம் செய்யாமல் தோன்றியவர்.

பாடகம் என்ற பெயருடன் ஆறு பிரிவினைகள் உண்டு. உத்திரார்சிகத்திற்கு 9 பிரபாடகங்கள். மொத்தம் 30 அத்தியாயங்கள், 446 தசதிகள் அதாவது 1868 ஸாமங்களாக ஓதப்பட்டு வருகின்றன. 63 நாயன்மார்களில் சோமாசிமாற நாயனார் தலவகார சாகையைச் சேர்ந்தவர்.

ஸாம வேதத்திற்குரிய உபவேதம் காந்தர்வமாகும். ஸாமத்திற்கு சாந்தோக்யம், கேனம் என்பன உபநிடதங்களாகும். ஸாமத்தின் பிராம்மணங்கள் பஞ்சவிம்சம், ஷட்விம்சம், ஸாமவிதானம், ஆர்ஷேயம், தலவகாரம், வம்சம், தைவதம், கோபதம் என்பனவாகும்.

ஸாம வேதத்தின் வடிவைக் கூறும்போது ஸ்வர்ண நிறக்கண்களுடன் ஸூர்யனின் ஜோதியை ஒத்ததாகப் பெரியோர் கூறுவர். வேதமே ஈச்வர ரூபம். ரிக்வேதம் அதற்கு பிராணன், யஜுர் வேதம் ஹ்ருதயம், அதர்வ வேதம் முகம், ஸாமம் ரோமம் என்றும் கூறுவர். மற்றும் சிலர் ரிக் வேதத்தை அக்னி என்றும், யஜுர் வேதத்தை வாயு என்றும் ஸாமத்தை ஸூர்யன் என்றும், அதர்வத்தை பிரமன் என்றும் கூறுவர். சாமத்தின் உபவேதம் காந்தர்வமெனும் இசைக் கலையே!

ஸாம வேதத்திற்கு ஸாயனர், பரத சுவாமி, மஹாசுவாமி, நாராயண புத்ரன், மாதவன் முதலியோரின் பாஷ்யங்கள் (உரைகள்) பிரஸித்தமானவை. ஸாம வேத பிராம்மணத்திற்கும் ஸாயனரே பழைய பாஷ்யகர்த்தா. ஸாமவேத உபநிஷதங்கட்கு ஸாயனர், சங்கரர், ஆனந்த தீர்த்தர், ஞானனந்தர், நித்யானந்தர், சங்கரானந்தர் முதலியோர் பாஷ்யம் செய்துள்ளனர். ஸாமவேத ஸூத்ரங்கட்கு ஸாயனர், அக்னி ஸ்வாமி, அஜாத சத்ரு முதலியோர் உரை எழுதி உள்ளனர்.

ஸாம வேத ஸம்ஹிதையை முதன் முதலாய் ஸ்டீவன்ஸ் என்பவர் 1842ல் லண்டனில் ஆங்கில மொழி பெயர்ப்புடன் அச்சிட்டார். கௌதம சாகீய ஸாம ஸம்ஹிதையை 1848ல் ஜெர்மன் மொழி பெயர்ப்புடன் தாமஸ் பென்பே வெளியிட்டார். ஸாமத்திற்கு கிரிஃப்பித் என்பவரின் ஆங்கில ஆக்கம் 1899ல் காசியில் அச்சடிக்கப்பட்டது. 1877ல் ஜைமினீய உபநிஷத பிராம்மணத்தை ஹெச்ஹெர்டல் என்ற ஐரோப்பியர் மொழி பெயர்த்து வெளியிட்டார். கோனே என்பவர் ஸாமவிதான பிராம்மணத்தை வெளியிட்டார். இவ்விதம் வெளி நாட்டினர் நம் வேதங்கட்கு குறிப்பாக ஸாம வேதத்திற்கு ஆற்றிய தொண்டு மிகப் பலவாகும்.

திருமங்கையாழ்வார், 'சாந்தோகன் பௌழியன், ஐந்தழலோம்பு தைத்திரியன் ஸாமவேதி'(பெரிய திருமொழி 5-5-9) என்று பெருமாளைக் குறிப்பிடுவார். 'சாந்தோகா, தலைவனே தாமரைக் கண்ணா' (பெரிய திருமொழி 11-8-9) என்றும் இதே திருமங்கை மன்னன் மங்களா சாஸனம் செய்திருப்பதும் கருதத்தக்கது. சாகை ஆயிரம் உடையார் சாமமோதுவது உடையார் என்பார் சம்பந்தர். சாந்தோக ஸாம மோதும் வாயான் என்பார் அப்பர்.

கீதாசார்யனும் 'ப்ருஹத் ஸாமம் தநூஸாம்நாம்'—ஸாம வேதத்தில் நான் ப்ருஹத் ஸாமம் என்று ஸாமத்திற்குப் புகழ்ச்சி அளித்து பேசியிருப்பது கருதத்தக்கது. கீதையின் தியான சுலோகம் கூறுகிறது:

"ஸர்வோபனிஷதோ காவோ
தோக்தா கோபால நந்தன: |
பார்த்தோ வத்ஸ. ஸுதீர் போக்தா
துக்தம் கீதாம்ருதம் மஹத் ||"

'எல்லா உபநிஷதங்களும் பசுக்கள். கோபாலனே கறப்பவன். அர்ஜுனன் கன்று. அருந்துவர்கள் அறிஞர்கள். கீதையே பால்'. நம் தேசத்தைப் போலவே வேதமும் நமது தாய். வேதமாகிய நம் தாயை மறவாது காப்பாற்றுவோம். 'நமாமி வேத மாதரம்!'

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

(திருவரங்கத்து) திருவமர் மார்பன்
கிடந்த வண்ணமும்
(திருவேங்கடத்து) செங்கண் நெடி
யோன்
நின்ற வண்ணமும்
எங்கண் காட்டென்று
என்னுளங் கவற்ற
53. வந்தேன் குடமலை
மாங்காட் டுள்ளேன்
........................
நீணிலம் கடந்த
நெடுமுடி அண்ணல்
தாடொழு தனயேன்
போதுவல்

என்ற அடிகளால் அறியலாம். இவ்வாறு கூறிய திருவேங்கட வருணனை முருகனுக்கு உரியதாயின், திருமால் திருத்தலப் பயணத்தின் பொருட்டுத் திருமாலிருஞ் சோலைமலையைச் சேவித்துக் கொண்டு வருவதாக அந்த மறையோன் தன்னை அறிமுகப் படுத்திக் கொள்வதோடும், 'கோயில், திருமலை' என்ற பண்டைய வழக்கிற் கேற்பத் திருவரங்கச் சிறப்பை முன்பும், திருவேங்கடச் சிறப்பைப் பின்பும் வைத்து அவன் அவ்விடத்துக் கூறிய இயை போடும் மிகவும் முரணுதல் காணலாம். இதனாலும் திருவேங்கடம் திருமால் மலை என்பதே இளங்கோ வடிகளின் கருத்தென்பது மலை இலக்காக அமைகின்றது.

**வேறு சான்றுகள்:**

திருவேங்கடம் திருமாற்கே சிறப்பாக உரியதலம் என்பதற்கு ஆழ்வார்களின் திருவாக்குகளேயன்றி வேறு பழைய சான்றுகளும் உள்ளன. அவற்றையும் ஈண்டு நிரல்படக் கூறுவது பொருத்தமாகும்.

1. 'வெறிகொள்...... அருளியும் ஆழியவன் (பு. வெ. மா. 230) என்ற ஐயனரிதனரின் தெளிவான வாக்கு முன்னர் (கட்டுரை: 'இன்றைய திரு வேங்கடம்'-காண்க) காட்டப் பெற்றது.

# வேங்கடவன் வெண்பா மாலை

1. திருவேங் கடத்தில் திகழ்ந்தொளிர் மாலே!
மருவும் வினைகளை மாற்றிப் — பெருவாழ்வை
அன்பர்க்கு நல்கிடும் அஞ்சன வண்ணனே!
இன்றென்னைக் காப்பாய் இனிது.

2. இனியனவும் இன்னாத என்பனவும் எங்கும்
கனியுமுன் அன்பிற் கரைந்த — புனிதருக்கு
இங்குண்டோ வேங்கடவா! எண்ணுவார் நெஞ்சினில்
தங்குவோனே என்னுளத்தும் தங்கு.

3. குன்று அருள்வண்ணம் கோலப் பெருவண்ணம்
வென்றுயர் குன்றெனும் வேங்கடத்தில் — நின்றஉன்
வண்ணம் இளங்கோ வரைந்த எழில்வண்ணம்
எண்ணுகிறேன் நின்னருளால் இன்று.

4. நின்னருள் நாடி நிறைவாகப் பெற்றவர்கள்
"இன்னமுதே! வேங்கடவா! இன்புருவே — அன்புற்றே!"
என்றேத்தி இன்புறுவர் என்றும் இவர்களுடன்
என்னையும் சேர்த்தருள் ஈண்டு.

5. ஈண்டி வந்து வேங்கடம் எய்துவார், என்றுமே
மாண்ட அருள்பெறுவர் மாயனே! — நீண்ட
உருவடியால் மூவுலகும் ஒன்றாய் அளந்த
திருமாலே! என்பெருமால் தீர்.

6. திருவுரு மார்பனே! தேவர்தம் கோவே!
பெருகார்வம் கொண்டுன்னைப் பேணி — வருவார்தம்
தீவினை தீர்க்கும் திருவேங்கடவா! என்
பாவினை ஏற்பாய் பரிந்து.

7. துன்றுபுகழ் வேங்கடவா! துன்பம் மிகுதுயர்கள்
என்றுமே நீக்கியருள் என்னிறையே! — உன்றன்
அருளும் திறனை அறிந்துன்தாள் சேர்ந்தார்
மருளகற்றி வாழ்வார் மகிழ்ந்து.

8. அன்றுமின்றும் தாயை அழைத்தே அழுகின்ற
சின்னக் குழந்தைபோல் செந்தமிழ்ப்பா — நன்குபாடி
ஆழ்வார் அழுதார் அழுகின்றேன் வேங்கடவா!
தாழ்வகற்றி என்னையுந் தாங்கு.

9. என்னைநீ ஆண்டருளும் இன்பவண்ணம் என்னுளத்தில்
நன்குணர்ந்து உன்னையே நாடுகின்றேன் — மன்னுசீர்
வேங்கடவா! என் கண்ணே! வேய்ங்குழல் ஊதிடும்
பாங்கின் பரிசைப் பகர்.

10. பகர்வரிய சீர்மிக்க பானிறச் சங்கும்
நிகரில்லாச் சக்கரமும் நீடும் — புகழும்கொள்
வேங்கடவா! தீயோரை வென்றழிக்கும் மாலே! நின்
பூங்கழற்றாள் வாழ்க பொலிந்து.

பேராசிரியர் கா. பொ. இரத்தினம் - இலங்கை.

2. பாரதம் பாடிய பெருந்தேவனும் தம் காலத்துப் புகழுடன் திகழ்ந்த திருவரங்கம், திருமலை, பெருமாள் கோயில் (காஞ்சி), அழகர் மலை ஆகிய திருப்பதிகளை,

"தேனேங்கு நீழல்
திருவேங் கடமென்றும்
வானேங்கு சோலை
மலையென்றும்-தானேங்கு
தென்னரங்கம் என்றும்
திருவத்தி யூரென்றும்
சொன்னவர்க்கும் உண்டோ
துயர்."

என்று தம் பாரதத்தில் பாடியுள்ளமை ஈண்டு கருதத் தக்கது.

3. ஆசிரிய மாலையுடையார் 'புடையது நெடுமால் வரைக்கப்புறம் புகினும்' என்று கூறுவர்.

4. இவற்றையெல்லாம் நன்கு அறிந்தே சிவபரத்துவம் கூறும் அத்வைதியாகிய நச்சினார்க்கினியர் கூறிய உரையிலடங்கிய கருத்து மேலே காட்டப் பெற்றது.

5. கம்பநாடரும் 'கோடுறுமால் வரையதனைக் குறுகுதிரேல் உம் கொடிய கொடுமை நீங்கி, வீடுறுதிர்' (கம்பரா. கிட்கிந்தை. நாடவிட்ட, 29) என்று கூறுவர். மேலும் அவர்,

வலம்கொள் நேமி
மழைநிற வானவன்
அலங்கு தாளிணை
தாங்கிய அம்மலை
விலங்கும் வீடுறு
கின்றன மெய்ந்நெறிப்
புலங்கொள் வார்கட்
கனையது பொய்க்குமோ

(கிட்கிந்தை-ஆறுசெல். 36)

என்று அம்மலையைச் சிறப்பித்தனர்.

6. ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வாரும் 'திருவேங்கடம் நங்கட்குச் சமன் கொள் வீடு தரும் தடங்குன்றமே' (திருவாய் 3.3:7) என்று பணித்தருளினர்.

7. முன்னோர் கூறிய மரபை நன்குணர்ந்த சிவப்பிரகாச அடிகளும் தாம் பாடிய சீகாளத்திப் புராணத்தில்

அரவணைச் செல்வன் வாழும்
அந்தமிழ் நிலத்தின் எல்லைத்
திருமலை கண்டு ணர்ந்தோர்
செறிவினைத் தொடர றுக்கும்
பெருமலை கண்டி றைஞ்சிப்
பிறங்குவெள் ளருவி தாழும
பொருவரும் ஏழ் கூடப்
பொருப்பினை இனிது கண்டான்.

என்று பாடினர்.

8. திருவேங்கடத்துக் கோயில் காப்பவராக முருகவேள் அமைந்துள்ளார் என்று கூறப்பெறுவதற்கேற்ப அத்திருமலைச் செவ்வேளை அருணகிரியார் பாடியுள்ளனர் என்பதை நாம் அறிவோம். ஆயினும், அவர் திருவாஞ்சியத்தைப் பற்றின 'இபமாந்தர் சக்ரபதி' என்ற திருப்புகழில் வேங்கடத்து அண்ணலை 'பிரசித்த நெடியவன்' எவரும் 'உயர்சார்ங்க சக்ரகரதலன்' என்றும் கூறியுள்ளமை கருதத் தக்கது. இதனால் அப்பெரியார் திருவுள்ளத்திலும் திருவேங்கடம் குறிஞ்சித் தெய்வமாகிய செவ்வேளுக்குரிய தாயினும், அது திருமாலின் புகழ்பெற்றத் திருக்கோயில்களில் ஒன்றாக இருப்பது தெளிவாகும்.

நான்காவது காரணம் :

சீனிவாசக் கடவுளின் திருமேனியில் நாகாபரணமும் சடையும் உள்ளமையால் அத்திருமேனி திருமாற்கு உரியதன்று என்று கூறும் செவ்வேள் கட்சியினர் அத்திருமேனி முருகனுக்கு என்பதை நிலைநாட்டத் தவறுகின்றனர். செவ்வேளுக்கு வக்காலத்து வாங்கி அதனைச் சிவபிரானுக்கு உரிய தாக்குகின்றனர். சிவபிரானின் சம்பந்தம் ஒரு பக்கப் பார்வையாகவே உளளது. திருவேங்கமுடையானின் திருமேனி சிவபிரானை ஒருபாற் கொண்டதாக உள்ளது. இந்த அரி-அரன் உருவினையே பேயாழ்வார் 'தாழ்சடையும் நீள் முடியும்' (மூன். திருவந்.63) சிறப்பித்தார். பொய்கையாழ்வாரும் 'அரன் நாரணன்' (முத. திருவந். 5), 'ஏற்றான் புள் ஊர்ந் தான்' (ஷை 74), 'பொன் திகழும் மேனிப் புரிசடை அப்புண்ணியனும்' (ஷை 98) என்ற மூன்று பாசுரங்களில் இவ்வடிவத்தைப் போற்றினர். திருமங்கை மன்னனும்,

"பிறைதங்கு சடையானை வலத்தே
வைத்து
பிரமனைத் தன்உந்தியே தோற்று
வித்து"

(பெரி. திரு. 3.4:9)

என்றும்,

'குழல்நிற வண்ணநின் கூறுகொண்ட
தழல்நிற வண்ணன்"

(பெரி. திரு. 3.4:9)

என்றும் கூறுவர். இந்த அரி-அரன் திருவுருவம் இன்றும் கூர்ந்துசேவிக்கத் தக்கதாக உள்ளது. இத்தகைய திருக்கோலத்தை இந்த எம்பெருமான் கொண்டிருந்ததால், அரியோ அரனோ என்ற வாதம் உண்டாக அதனை உடையவர் தீர்த்துவைத்தார் என்பதை முன்னர் ('இன்றைய திருவேங்கடம்'-கட்டுரை காண்க.) விளக்கப்பட்டது.

திருமலை சிவபிரானுக்குரிய தலமாகக் கருதப் பெற்றிருப்பின் தேவாரம் முதலிய திருமுறைகள் இயற்றிய சிவனடியாகளுள் ஒருவரேனும் இம்மலை சிவனுக்குரியதாகப் பாடியிருப்பர். செவ்வேளின் படைவீடுகளைப் பற்றிப் பாடிய நக்கீரர் முதலிய சங்கத்தார் காலத்தேனும் முருகன் விரைப்பு என்று கொண்டாடியிருப்பர். இரண்டும் இல்லையாதலின், பண்டைக் காலத்திலேயே திருமலை சிவபிரானுக்கேனும் முருகவேளுக்கேனும் சிறப்புடைய தலமாகக் கருதப்பட்டதன்று என்பது தெளிவாகின்றது. சோழ அரசர்கள் காலத்தில் திருமலையில் ஏற்பட்ட கல்வெட்டுகளிலும் [5]'ஸ்ரீ வைணவர்கள் இரட்சை' 'இந்நிபந்தம் செய்தது ஸ்ரீ வைணவர்களாவோம்' எனக் காணப்படுவதாலும் திருமலைக் கோவில் உடையவருக்கு முன்பே சிறிதும் ஐயமின்றித் திருமால் குன்றமாகவே கொள்ளப்பட்டிருந்தது என்று தெளிந்து கொள்ள முடிகின்றது.

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 13

ஸுகம் த்விதானீம் த்ரிவிதம்
ச்ருணு மே பரதர்ஷப |
அப்யாஸாத்ரமதே யத்ர
து:காந்தம் ச நிகச்சதி ‖ (18-36)

மனித வாழ்வின் இலட்சியம் 'துக்க நிவிருத்தியும் ஆனந்தப் பிராப்தியு' மேயாகும். ஆனால் யாண்டும் சுகத்தையே அனுபவிப்பவர் எவரையும் நாம் உலகில் காண இயலாது. சுகத்தை அனுபவிக்கவும் பயிற்சி வேண்டும் என்பது பகவானது கூற்று ஆகும். அனைத்துயிரும் துக்கம் சிறிதும் கலவாத இன்பத்தையே தொடர்ந்து அனுபவிக்க விரும்புகின்றன என்றாலும் உண்மையில் அவற்றிக்குக் கிட்டுவது கொஞ்சம் இன்பமும் நிறையத் துன்பமுமே யாகும். நம்மவரது வாழ்க்கையில் நாம் பெறும் இன்பத்தின் தன்மை ஒரே மாதிரியாகவா அமைகிறது? சிலருக்கு இன்பம் மின்னல் போலத் தோன்றி மறைந்து விடுகிறது. பிறகு மீண்டும் தொடர்ந்து பல காலம் துன்பம்; துக்கம். அதன் பின் மீண்டும் ஒரு முறை மின்னல் போல இன்பம். மீண்டும் துன்பம். மற்றும் சிலருக்கு இன்பம் வந்து போய்க்கொண்டு இருக்கும். இது ஓட்டைப் பாத்திரத்தில் சொட்டும் நீருக்கு நிகர். இன்பம் எங்கிருந்து வருகிறது எங்கே போகிறது என்பதும் அவர்களுக்குப் புலப்படாது. அபூர்வமாக யாரோ ஒரு சிலருக்கு வளர்பிறை போல ஓங்கும் சுகம் வந்து வாய்க்கும். அத்தகையவர்களுக்கும் துக்கம் வாய்க்கும் என்றாலும் அதன் காலம் மிகக் குறைவாகும். மூவகையினரில் இவர்களை அதிர்ஷ்டசாலிகள் எனலாம். முதல்வகையினர் துர்பாக்யசாலிகள்; இரண்டாம் பிரிவினர் இடையில் உள்ளவர்களாவார்கள்.

துன்பத்தைத் தவிர்த்தல், இன்பத்தைப் பெறுதல் இரண்டிற்குமே பயிற்சி தேவைப்படுகிறது. அறிவும் அனுபவமும் அதிகமாகும் அளவு இதில் நாம் தேர்ச்சி அடையலாம். துன்பத்தில் உழலும் பலர் அதைத் துன்பம் என உணராமலேயே இழிந்த வாழ்க்கை வாழ்வதைக் காணலாம். படித்தவர்கள் எத்தனை பேர் போதை மருந்துகளுக்கும், குடிப்பழக்கத்திற்கும் அடிமைப்பட்டு விலங்கிற்கும் கீழான இழிந்த வாழ்க்கை வாழ்வதைக் காண்கிறோம். எது நிலைத்த சுகம். எது நிலையில்லாத சுகம் என்று அவர்களுக்குப் பாகுபடுத்தத் தெரியாது.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

இதைக் கருத்தில்கொண்டு பகவான் முக்குணங்களின் அடிப்படையில் அமையும் மூவகை சுகத்தைப் பற்றிய விளக்கத்தை ஈண்டு தருகிறார்.

யத்ததக்ரே விஷமிவ
பரிணாமே அம்ருதோபமம் |
தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தம்
ஆத்ம புத்திப்ரஸாதஜம் | (18-37)

"எது முதலில் விஷம் போலவும் முடிவில் அமிர்தத்துக்கு ஒப்பானது மாகிறதோ அந்த சுகம் சாத்விக மானது. ஆத்மாவில் நிலை பெற்ற புத்தியின் தெளிவிலே தோன்றும் அந்த சுகம் சாத்விகமானது" என்று பகரப் படுகிறது.

கட்டுப்பாடான வாழ்க்கை வாழ்வது என்பது முதலில் மிகவும் சிரமமானதாகத் தோன்றும். 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்பதில்தான் ஆரம்பத்தில் மனம் செல்லும். மனம் போனபடி வாழ்வில் நாட்டம் செல்லும். ஆனால் அது போகப் போக எப்படித் தெரியுமா முடியும்? தொடர்ந்த துக்கத்திலும் துன்பத்திலும் மனிதனைக் கொண்டு சேர்த்து விடும்.

வைராக்யம், ஜபம், தியானம், புலனடக்கத்துடன் கூடிய வாழ்க்கை ஆரம்பத்தில் வேப்பங்காயைப் போலக் கசக்கும். "உலகில் எத்தனை வகை வகையான இன்பங்கள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் அனுபவிக்காமல் இப்படியா கண்ணையும் மூக்கையும் பொத்திக்கொண்டிருப்பது? எவ்வளவு முடியுமோ அவ்வளவு அனுபவித்துத் தீர்த்து விட வேண்டும்" என்று மனம் நம்மை ஏமாற்றிப் படுகுழியில் தள்ளப் பார்க்கும். ஆனால் அனுபவம் புகட்டும் பாடமோ வேறு. முதலில் எது விஷம் போலத் தெரிகிறதோ அது முடிவில் அமிருதமாக ஆகிறது. நெல்லிக்காயை முதலில் கடித்துச் சுவைத்தால் கசப்புத் தெரியும். பிறகு சிறிது நேரம் கழித்து நீரைக் குடித்தால் வாயில் இனிப்புத் தோன்றும். சாத்விக சுகம் இத்தகையது. இளமையில் கட்டுப்பாடான வாழ்க்கை வாழ்ந்து மனத்தை அங்குமிங்கும் அலையவிடாமல் உடலைச் சீரழிக்காது நெறி முறையுடன் வாழ்ந்தவர்கள் பிற் காலத்தில் அமைதியுடனும் மகிழ்ச்சியுடனும் வாழ்வதைக் காணலாம்.

யோகிகளின் வாழ்க்கையையும், போகிகளின் வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த உண்மை நன்கு விளங்கும். புலனடக்கம் பழகுதல் தொடர்ந்த இன்பத்தையும் ஆரோக்யத்தையும் பெறுவதற்கான உறுதியான வழியாகும். அடுத்து ராஜஸிக சுகம் பற்றிய விளக்கம் தரப்படுகிறது.

விஷயேந்த்ரிய ஸம்யோகாத்
யத்ததக்ரே அம்ருதோபமம் |
பரிணாமே விஷமிவ
தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ||
(18-38)

"பொறி புலன்களின் தொடர்பால் முதலில் அமிர்தம் போன்றிருந்து முடிவில் விஷம் போன்றுரும் சுகம் ராஜஸமென்று கூறப்படுகிறது".

நாம் பெறும் இன்பங்கள் பொதுவாக இந்திரியங்கள் மூலமாகத்தான் பெறப்படுகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவற்றின் மூலம் நாம் பல்வகை இன்பங்களைப் பெறுகிறோம். அவற்றைப் பெறுகின்ற அளவு நமது ஆற்றல் குறைகிறது. உதாரணமாக அடிக்கடி சினிமா, டி. வி. என்று பார்ப்பவர்களது கண் பார்வை சீக்கிரம் கெட வாய்ப்பு அதிகம் உண்டு. அடக்கமும் கட்டுப்பாடும் இன்றித் தங்களது ஆற்றலைக் கெட்ட வழிகளில் விரயம் செய்பவர்கள் எய்ட்ஸ், டி. பி., புற்று நோய் போன்ற மற்றும் பல வியாதிகளுக்கு இலக்காகிச் சீரழிகிறார்கள். இத்தகையவர்கள் முப்பது வயதிலேயே தொண்ணூறு வயது கிழவர்களைப் போல தலைமுடி உதிர்ந்து பல் இழந்து கண் பார்வை இழந்து பரிதாபமாகக் காட்சியளிக்கிறார்கள். காரணம் அவர்கள் பெறுவதாக நினைக்கும் இன்பம் முதலில் அவர்களுக்கு அமிர்தமாகத் தோன்றுகிறது. இறுதியில் அதுவே கொடும் விஷமாக மாறி விடுகிறது.

இந்தக் காலத்துக் கல்லூரி மற்றும் பள்ளி மாணவ மாணவியர்கள் சிலர் இத்தகைய ராஜஸிக இன்பத்திற்கு இலக்காகிப் போதைப் பொருள்களுக்கு அடிமையாகி நடை பிணங்களாகக் காட்சி தருகின்றார்கள். இன்றைய இளைஞர் சமுதாயம் இத்தகைய இன்பத்தில் சிக்குண்டுத் தவிக்கும் அவல நிலை அரசாங்கத்தையே இப்பொழுது சிந்திக்க வைத்திருக்கிறது. டெல்லி, பம்பாய், கல்கத்தா, சென்னை போன்ற பெரு நகர்களில் உள்ள கல்லூரி விடுதிகள் பல்வேறு போதை மருந்துகளின் கிடங்குகளாகக் காணப்படுவதாகவும், மாணவர்கள் மட்டுமல்லாது மாணவிகள் பலரும் இந்தப் போதைப் பழக்கங்களுக்கு அடிமைகளாகக் காட்சி தருவதாகவும் புள்ளி விவரங்கள் கூறுகின்றன.

தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்த புராணக் கதை புகட்டும் பாடத்தை நாம் நினைவு கூற வேண்டும். கற்பகத்தரு காமதேனு போன்ற பல்வேறு செல்வத்திற்குப் போட்டி போட்டவர்கள் இறுதியில் ஆலகால விஷம் வந்ததும் அலறிப் புடைத்துக்கொண்டு புகலிடம் தேடி ஓடினர். இறுதியில் புலனடக்கமே வடிவெடுத்த சிவபெருமானின் பாதங்களை தஞ்சமடைந்தார்கள். விஷத்தைத் தன் கண்டத்தில் ஏற்ற சிவன் அவர்களைக் காத்தருளினான்.

புலன் வழி வாழ்வு அமிருதமென முதலில் தோன்றி இறுதியில் விஷம் போல ஆகி நம் உயிரையே மாய்த்து விடும். எனவே புலன்களாகிய வலையில் சிக்கிக் கொள்ளாது புலனடக்கம் பழகி ஆரோக்கியமும் ஆனந்தமும் நிறைந்த வாழ்வு வாழ முயல்பவரே சான்றோர் ஆவர்.

தாமஸ வகை இன்பம் அடுத்து விளக்கப்படுகிறது.

(தொடரும்)

## சந்தாதாரர்களுக்கு ....

30-11-87—ம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

48 51 52ஏ 64 67 98 115 117 121 முதல் 125 127 209 247 248 249 345 402 408 418 422 423 425 429 430 431 434 437 438 577 580 582 776 835 841 843 முதல் 847 849 852 854 855 858 863 866 868 869 2085 2087 2088 2091 முதல் 2095 2108 2109 2113 2114 2115 2118 2129 முதல் 2136 2138 முதல் 2145 2147 2148 2149 2151 முதல் 2161 2163 முதல் 2181 2183 முதல் 2186 2188 முதல் 2192 வரை 2194 முதல் 2219 2221 2222 2223 2225 2226 2227 2229 முதல் 2236 2256 2271 2277 2314.

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆகையால் பன்றி என்னைச் சேர்ந்தது என்று அர்ஜுனன் கூற இதே மாதிரி சிவனும் கூற, இருவருக்கும் வாக்குவாதம் முற்றிக் கைச் சண்டையில் ஆரம்பித்தன. அர்ஜுனன் தான் கற்றவித்தையெல்லாம்உபயோகித்தான். ஒன்றும் பயனளிக்கவில்லை. முடிவாக வில்லை ஓங்கி வேடனை சிவனின் தலையில் அடித்தான். உடனே அன்பனுக்கு அருள்புரிவதற்கு அப்பன் எதிரே தோன்றினான். "அர்ஜுன! உன்னுடைய வீரத்தை மெச்சினேன். எதற்காக தவம் செய்தாயோ அந்த பாசுபதம் என்ற அஸ்திரம் இப்போதே கொடுத்தேன். நீ வெற்றி பெறுவாய்" என்று கூறி மறைந்து விட்டார். இப்பொழுதும் சிவலிங்கத்தின் மேல்பாகத்தில் "பார்த்த பிரஹரம்" என்ற கோட்டை, சில்பிகள் செதுக்கி வைப்பார்கள். இவ்வகையில் அர்ஜுனனுக்கு அனுக்ரஹித்தார்.

**கணபதிக்கு அனுக்ரஹித்த மூர்த்தி :**

பார்வதியின் தோழிகளான ஜயை விஜயை என்றவர்கள் பார்வதி தேவியிடம் "தேவி! பரமேச்வரனுக்கு துவாரபாலகர்கள், பிரமத கணங்கள் முதலியவர்கள் இருக்கிறார்கள். அதே போல் நமக்கு ஒருவரும் இல்லையே" என்று கூறினார்கள். இதைக் கேட்ட பார்வதி சிந்திக்கலானாள்.

ஒரு நாள் பார்வதி ஸ்நாநம் செய்து கொண்டிருக்கும்போது பரமேச்வரன் திடீரென உள்ளே வந்து விட்டார். உடனே பார்வதி வெட்கத்துடன் உள்ளே மறைந்து விட்டாள். அவ்வமயம் தன் தோழிகள் சொன்னது ஞாபகத்திற்கு வந்தது. அப்பொழுதே தனக்கு விச்வாசமான நம்பிக்கையான ஒரு வேலைக்காரன் (காவல்காரன்) தேவை என உணர்ந்தாள். பார்வதி தன் உடலிலிருந்த அழுக்கை எடுத்து அழகான, குணவானான, தேஜஸ்வியான ஒரு பாலகனை ச்ருஷ்டித்து, அவன் கையில் ஒரு தடியைக் கொடுத்துத் தனக்கு துவாரபாலகனாக நியமித்துக் கொண்டாள். மேலும் அவனுக்கு "உன்னுடைய அனுமதியின்றி ஒருவரும் உள்ளே வரக்கூடாது" என்று உத்திரவு போட்டாள். ஒரு சமயம் பரமேச்வரன் பார்வதியைப் பார்க்க வந்த போது இப்பாலகன் தடுத்து நிறுத்தினான். பரமேச்வரன் "நீ யார்? நான் பார்வதி தேவியின் கணவன், என்னுடைய வீட்டினுள் செல்ல எனக்கே தடையா?" என்று கூறினார். உடனே அந்தப் பாலகனைத் தள்ளி விட்டு உள்ளே நுழைய முற்பட்டார். அந்தப் பாலகன் தன் தடியினால் தடுத்து நிறுத்தினான். சிவனுக்குக் கோபம் வந்தது. பிரமத கணங்களைக் கூப்பிட்டு இப்பாலகனை உருவம் இல்லாமல் செய்து விடுங்கள் என்று கட்டளையிட்டார். பாலகனுக்கும் சிவகணங்களுக்கும் யுத்தம் நடந்தது. ஆனாலும் பாலகன் சிவனை உள்ளே நுழைய விடவில்லை. சிவனுக்குக் கோபம் வந்து தன்னுடைய திரிசூலத்தினால் அந்த பாலகனின் கழுத்தைத் துண்டித்து எறிந்தார்.

இவ்விபரத்தை அறிந்த பார்வதி லக்ஷக்கணக்கான சக்தி தேவதைகளை அனுப்பி எல்லோரையும் நாசம் செய்யச் சொன்னாள். எல்லோரும் பிரம்மாவைப் பிரார்த்திக்க பிரம்மா 'பார்வதி தேவியைப் பிரார்த்தினைச் செய்யுங்கள்' என்று தேவர்களிடம் கூற, தேவர்கள் தேவியைக் குறித்துப் பிரார்த்திக்க தேவியானவள், 'தேவர்களே என் பாலகனைப் பிழைப்பித்து அவனுக்கு முதல் மரியாதை (பூஜை) செய்ய வேண்டும்' என்ற நிபந்தனைப் போட்டாள். சரி என்று ஒப்புக் கொண்டு சிவனிடம் ஓடினார்கள். சிவன் 'வடக்கு திசையில் ஒரு யானை இறந்து கிடக்கும். அதனுடைய தலையைக் கொண்டு வந்து இந்தப் பாலகனின் உடலோடு சேர்த்து வையுங்கள், அப்பாலகன் பிழைத்துக் கொள்வான்' என்று கூறினார். அதேபோல் தேவர்கள் செய்ய, அப்பாலகன் கஜமுகனாகப் பிழைத்து நின்றான். எல்லோரும் அவனை கஜமுகன் என்று அழைக்கலானார்கள். சிவன் தோன்றி கஜமுகனை ஆசி கூறித் தன்னுடைய கணங்களுக்கு அதிபதியாகச் செய்தார். அதிலிருந்து 'கணபதி' என்ற பெயரைப் பெற்றான். எந்தக் காரியம் செய்ய முற்பட்டாலும் கணபதிக்குப் பூஜை செய்துதான் ஆரம்பிக்க வேண்டுமென்று உத்திரவு பிறப்பித்து அனுக்ரஹித்தார்.

**இராவணனை அனுக்ரஹித்த மூர்த்தி :**

இராவணன் ஒரு முறை குபேரனுடன் யுத்தம் செய்து அவனுடைய புஷ்பக விமானத்தைப் பிடுங்கிக் கொண்டு இலங்கையை நோக்கி வருங்கால் நடுவில் சரவண மலைப் பக்கத்தில் வந்தவுடன் அந்த விமானம் மேலே செல்லாமல் நின்றுவிட்டது. மேலே தாண்டிச் செல்ல முடியவில்லை. இராவணன் விமானத்திலிருந்து இறங்கி மலையின் உச்சியில் நின்று பார்த்தான். கைலாயமலையின் உத்யான வனம் தெரிந்தது. அதைப் பார்த்தவுடன் அந்த உத்யானவனத்தில் விளையாடவும், பார்க்கவும் விரும்பி இறங்கினான். அங்கே குரங்கு முகம் போன்ற முகத்தையுடைய ஒரு உருவம் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தான். அதனிடம் சென்று 'ஏன் என்னுடைய விமானம் மேலே செல்லாமல் இங்கேயே நின்று

---

**எல்லாம் ஈசன மயம**

மனிதனிடத்தில் அகங்காரம் இருக்கிறபொழுது வேற்றுமை புத்தியும் வருகிறது. வேற்றுமை புத்தி இருக்கின்ற வரையில் பாவ புண்ணியம் உண்டு. அகங்காரம் இல்லாதபொழுது வேற்றுமை இல்லை. பாவ புண்ணியம் இல்லை. எல்லாம் ஈசன் மயம்.

— **பகவான் இராமகிருஷ்ணர்.**

**வி. ஸ்ரீதர் — கோயம்புத்தூர்.**

## தி. தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

காலை வெள்ளிக்கிழமைகளில்

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | | |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

(அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்)

திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

விட்டதே! காரணம் என்ன?' என்று கேட்டான். அதற்கு அந்த உருவமுள்ள நந்தி பகவான் "அங்கே தேவியும், தேவனும் நந்தவனத்தில் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் அங்கே இப்பொழுது போக முடியாது. அதனால்தான் அந்த விமானம் நந்தவனத்தின் மேலே செல்லவில்லை' என்று கூறினார். அதைக் கேட்ட இராவணன் நந்தியைப் பார்த்து 'ஹே குரங்கே நீ அவர்களுக்குக் காவல் காக்கிறாயா? தேவியும், தேவனும் விளையாடுகிறார்களா? என்ன விந்தை' என்று கேலி செய்தான்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட நந்தி "ஹே இராவணா! என்னைப் பார்த்து குரங்கு என்றல்லவா சொன்னாய். இதே குரங்கு உருவமானது உன்னையும், உன் நாட்டையும், நந்தவனத்தையும் அழிக்கட்டும்" என்று சபித்தார்.

இராவணனுக்குக் கோபம் அதிகமாகி அந்த மலையை அடியோடு தகர்த்து எரிய முற்பட்டான், தன்னுடைய இருபது கைகளையும் மலையின் அடியில் விட்டான். மலை அசைந்தது. பரமேச்வரன் தன் ஞான திருஷ்டியினால் காரணம் அறிந்து தன் கட்டை விரலால் மலையை ஓர் அழுத்து அழுத்தினார்.

மலையின் அடியில் இருந்த கைகள் நசுங்க ஆரம்பித்தன. இராவணன் அழுவதற்கு ஆரம்பித்தான். இராவணன் என்றால் அழுவது என்று வடமொழியில் பொருள். அதற்கு முன் பௌலஸ்த்யன் என்பது அவனது பெயராகும். பிறகு இராவணன் தன் நரம்புகளைக் கொண்டு வீணை செய்து ஸாமகானத்தை வாசித்தான். பரமேச்வரன் ஸாம வேத கானத்தில் மயங்கி இராவணனுக்கு அனுக்ரஹம் செய்தார். இந்த வரலாற்று சித்ரம், சிற்பம் ஆகியவற்றை எல்லா சிவ க்ஷேத்ரங்களில் காணலாம்.

தொடர் நூல் :

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு


தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.


இக்கேள்விக்குச் சிலர்-'யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே' எதனால் இப்பிராணிகள் உண்டாகின்றனவோ-என்று தொடங்கும் தைத்திரீய ச்ருதியில் 'தத் ப்ரஹ்ம' அது ப்ரஹ்மம்-என்று ஒரே தத்-அது என்ற சப்தம் கேட்கப்பட்ட போதிலும், 'யதோ... ஜாயந்தே-தத் ப்ரஹ்ம, யேநஜீவந்தி-தத் ப்ரஹ்ம, யத் அபிஸம்விசந்தி-தத் ப்ரஹ்ம'=எதனால் பிராணிகள் உண்டாகின்றனவோ-அது ப்ரஹ்மம், எதனால் பிழைத்திருக்கின்றனவோ-அது ப்ரஹ்மம், எதில் புகுகின்றனவோ=லயமடைகின்றனவோ-அது ப்ரஹ்மம் என்று தத்-அது என்பதனை மூன்று வாக்யங்களிலும் சேர்த்துக் கொண்டால்,உலகப்பிறப்பின்காரணமாயிருத்தல் உலகவிருப்பின் காரணமாயிருத்தல் உலகலயத்தின் காரணமாயிருத்தல் என்பவற்றில் ஒவ்வொன்றும் தனித்தனியே ப்ரஹ்ம லக்ஷணமாகக் கிடைக்க இடமுள்ளது. 'ஜந்மாதி அஸ்ய யத:' என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் 'ஜந்மாதி' என்பதனால் உலகப் பிறப்பிருப்பிறப்புக்கள் மூன்றும் குறிக்கப்பட்டுள்ள போதிலும் அம்மூன்றின் கூட்டத்திற்கு ப்ரஹ்மம் காரணமென்று கருதப்படவில்லை; பின்னையோவெனில்-அம்மூன்றில் ஒவ்வொன்றிற்கும் ப்ரஹ்மம் (தனித்தனியே) காரணமென்றுதான் கருதப்பட்டுள்ளது. அம்மூன்றின் கூட்டத்தைக் குறித்துக் காரணமாயிருத்தலை ப்ரஹ்மத்தின் லக்ஷணமாகக் கூறுகின்ற பாஷ்ய வாக்கியத்தை - ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே காரணமாயிருத்தலைக் குறிப்பதில் நோக்குடையதாகச் சிறிது வருந்திப் பொருந்தவிட வேண்டும்; இல்லையாகில், பிறப்பிருப்பிறப்புக்களில் ஒவ்வொன்றைக் குறித்துக் காரணமாயிருத்தலென்பதே ப்ரஹ்மந் தவிர வேறொன்றிற்கும் இல்லாமையால் ப்ரஹ்மத்திற்குப் பிறவற்றைக் காட்டிலும் உள்ள வாசியை-வேறுபாட்டினை அறிவிக்க வல்லதாயிருக்க, மூன்றின் கூட்டத்திற்குக் காரணமாயிருத்தலை ப்ரஹ்ம லக்ஷணமாகக் கருதுவதற்குப் பயனேதும் இல்லையாய் விடுமன்றோ-என்று விடை கூறுகின்றனர்.

இக்கொள்கை - சண்டமாருதம் தொட்டையாசாரியர் ஸ்வாமி அருளிய பாராசர்ய விஜயம் முதலிய நூல்களில் கூறப்பட்டிருக்கிறது. 'இங்கு ஜந்ம (பிறப்பின்) காரணத்வம், ஸ்திதி (இருப்பின்) காரணத்வம், லய (அழிவின்) காரணத்வம் ஆகியவை தனித்தனியாகவே ப்ரஹ்மத்திற்குப் பிறபொருள்களைக் காட்டிலும் உண்டான வேறுபாட்டினைக் காட்ட ஆற்றல் படைத்துள்ளனவாகையால் அவை அப்படியே (= தனித்தனியே) ப்ரஹ்ம லக்ஷணங்களாகக் கடவன என்று சில ஆசார்யர்கள் கருதுவர்' என்று அந்நூலிலுள்ள பகுதி காணத்தக்கது.

பிறரோவெனில் -'பூஜிக்கத் தக்கவரே ப்ரஹ்மத்தைப் பற்றி எனக்குக் கற்பிக்கக்கடவீர்' (தைத்தி-ப்ருகு-1) என்பதனால்-மோக்ஷமடைய விரும்பிய ஒருவன் உபாஸிக்கத் (தியானிக்கத்) தக்க ப்ரஹ்மம் எது என்று சிஷ்யரான ப்ருகு வருணரென்னும் தம் தந்தையாரை முன்பு கேட்ட கேள்விக்கு விடையாக 'எதனால் இப்பிராணிகள் உண்டாகின்றனவோ' என்று தொடங்கும் ச்ருதி வாக்கியம் எழுந்தது. அது தன்னில் உலகப் பிறப்பின் காரணமாயிருத்தலையாவது இருப்பின் காரணமாயிருத்தலையாவது அழிவின் காரணமாயிருத்தலையாவது ப்ரஹ்மத்தின் லக்ஷணமாகச் சொன்னால், உபாஸிக்கத் தக்க ப்ரஹ்மம் இன்னதென்ற நிச்சயம் உண்டாகாது; தன்னைக் காட்டிலும் உயர்த்தியில்லாத பெருமையாகிய வடிவோடு கூடியதாக நிச்சயிக்க வேண்டிய ப்ரஹ்மத்தின் நிச்சயமானது அவ்வடிவிற்கு நேர் முரணான அத்தகைய பெருமையில்லாமையின் ஸந்தேஹத்தைத் தீர்த்தாலொழிய உண்டாகாமையினால் என்க. உலகப் பிறப்பின் காரணமாயிருத்தல் மட்டுமே ப்ரஹ்மத்தின் லக்ஷணமென்று சொல்லிய போதிலும், இருப்பு முதலியவற்றின் காரணமாக வேறொன்று இருக்கலாமென்று தோன்றுகையாலும் அவ்விருப்பு முதலியவற்றின் காரணமாயிருத்தலுக்குத் தேவையான குணங்கள் இந்த ப்ரஹ்மத்தில் இல்லை போலுமென்று தோன்றுகையாலும் எல்லையில்லாத பெருமையில்லாமையைப் பற்றிய ஸந்தேஹம் இந்த ப்ரஹ்மத்தினிடம் உண்டாகும். உலகப் பிறப்பிருப்பிறப்புக்களாகிய ஸமுதாயத்தின் காரணமாயிருத்தலை ப்ரஹ்மத்தின் லக்ஷணமாகக் கூறினால், அதற்குத் தேவையான குணங்கள் அனைத்தும் இந்த ப்ரஹ்மத்தில் உள்

ளனவென்று தோன்றுதலால் தன்னைக் காட்டிலும் உயர்த்தியில்லாத பெருமையில்லாமையைப் பற்றிய ஸந்தேகத்திற்கு இடமில்லாமையால் அத்தகைய பெருமையாகிய வடிவோடு கூடியதாக ப்ரஹ்மத்தைப் பற்றிய நிச்சய முண்டாக இடமுள்ளமையால் குற்றமேதுமில்லை. இவ்விஷயத்தையே முற்காட்டிய ஸூத்ர பாஷ்யத்தின் ச்ருத ப்ரகாசிகையுரை கூறுவதைக் காண்மின்.

*(1)* "உலகப் பிறப்பின் காரணமாயிருத்தல் இருப்பின் காரணமாயிருத்தல் அழிவின் காரணமாயிருத்தல் ஆகிய இம்மூன்றின் கூட்டம் ப்ரஹ்மத்தின் லக்ஷணமென்பது ச்ருதிவாக்யத்தின் ஸ்வாரஸ்யத்தினால் (=இயற்கைச் சுவையினால்) நிச்சயிக்கப்படுகிறது. 'எதனால் இப்பிராணிகள் உண்டாகின்றனவோ, எதனால் ஜீவிக்கின்றனவோ, எதனில் லயமடைகின்றனவோ' என்றவிடத்தில் ஒவ்வொரு வாக்யத்திலும் 'அது ப்ரஹ்மம்' என்று கூறப்படாமல், மூன்று வாக்யமும் முடிந்தபின்பன்றோ 'அது ப்ரஹ்மம்' என்று கூறப்பட்டுள்ளது. இம்மூன்றில் ஏதாவது ஒன்றே லக்ஷணமாகக் கூடுமானால் மற்றையிரண்டும் கூறியது பயனில்லாமற் போய்விடும்.

*(2)* மூன்றும் சேர்ந்து லக்ஷணமாகாது; ஏதாவது ஒன்றினால் மட்டுமே ப்ரஹ்மத்திற்கு மற்றெல்லாப் பொருள்களைக் காட்டினும் வாசி தோன்றி அப்பொருள்கள் ப்ரஹ்மமல்ல என்று விலக்கிவிட்டபடியால் வேறிரண்டு லக்ஷணங்களைக் கொண்டு விலக்க வேண்டிய பொருள் ஏதுமில்லாமையால் என்க. ஏனெனில் உலகின் உற்பத்திக்குக் காரணமாயிருத்தலை ப்ரஹ்ம லக்ஷணமாகச் சொன்னால் அவ்வுலகவுற்பத்திக்கு நிமித்த காரணமாகவும் உபாதாநகாரணமாகவும் (=கருத்தாவாகவும் முதற்காரணமாகவும்) இருக்கும் மற்றொரு பொருள்-உலக விருப்பிறப்புக்களுக்குக் காரணமாயிருத்தலைச் சொல்லி விலக்க வேண்டியதாக இல்லையல்லவா? என்று கேட்டால்,

*(3)* ஆம், உண்மைதான்; விலக்கப்பட வேண்டிய பொருள் வேறொன்று உள்ளதென்றும் அதை விலக்கவே மூன்றும் சேர்ந்து லக்ஷணமாகச் சொல்ல வேண்டுமென்றும் கருதப்படவில்லை. ஆயினும் ச்ருதிவாக்யத்தின் இயற்கைச் சுவை குன்றுமலிருப்பதற்காக ஸூத்ரகாரரான வேதவ்யாஸ பகவான் மூன்றும் சேர்ந்தே லக்ஷணமென்று பணித்தார். ச்ருதிதான் மூன்றும் சேர்ந்தே லக்ஷணமென்று கூறியது என்கொண்டெனில், 'அந்த ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்' என்ற அடுத்த வாக்யத்தினால் விதிக்க விரும்பிய ப்ரஹ்மோபாஸநத்திற்குத் தேவைப்பட்ட நிரதிசய ப்ரஹத்வத்திற்கு (தனக்கு மேலெல்லையில்லாத பெருமையை உடைமைக்கு) நேர்முரணை அத்தகைய ப்ருஹத்வமில்லாமை என்பது யாதொன்று உண்டோ அதைப்பற்றிய ஸந்தேஹத்தை ப்ரஹ்மத்தினிடம் உண்டாகாமல் விலக்குவதற்

# இமாலயத்தின் பெருமை!

திரு. ஏ. நாகராஜன் — கடலூர்.

நம் இந்திய நாட்டின் வடக்கு எல்லையாகக் கம்பீரமாகத் திகழ்வது இமயமலையாகும்! "இமாலயம்" என்ற உடனே நமது மனம் உயர்வடைகிறது. எண்ணங்கள் விரிவடைகின்றன. அச்சம் அகல்கின்றது. அரணிற்குள் இருக்கின்றோம் என்ற இறுமாப்பு எல்லோருக்கும் பிறக்கின்றது. ஆதலினால் இமயம் நம் நாட்டிற்கும் பாதுகாப்பு நல்கும் கோட்டையாகவும் விளங்குகிறது. இமயத்திலுள்ள பனிக்கட்டிகள் சூரிய வெப்பத்தால் கரைந்து எல்லா நதிகளும் ஜீவநதிகளாகின்றன. இமாலயம் ஔஷதிகளுக்கு உறைவிடமாகவும் விளங்குகிறது. பல அரிய மலைமூலிகைகளும், பச்சிலைகளும் விஷம் நீக்கும் வேர்களும் மக்களின் நோய்களைப் போக்கி நல்ல அழகினையும் ஆரோக்கியத்தையும் கொடுக்கின்றன. அவைகள் எல்லாம் தோன்றுமிடம் இமாலயமாகும். இமாலயம் இயற்கையழகின் தாயகம்! இந்திய நாட்டின் எழில் மிகுந்த இயற்கைக் கோட்டை. அழகு மூட்டை. தத்துவ ஞானப் பாட்டை!

இங்கே வந்து விட்டால், கவிஞனுக்குக் கவிதைப் பஞ்சமில்லை. சங்கீத வித்வானுக்குப் பாட்டுத் தானே வரும். தெய்வ உபாசகனுக்கு தெய்வீகத் தன்மை கைவரப் பெற்று மேன்மையடைவான். இவை எல்லாம் இமயத்தின் இயற்கை உதவிகள்! இயற்கையழகில் ஈடுபட வேண்டுமானால் இங்குச் செல்ல வேண்டும். இந்த மலைச் சிகரங்களைச் சுற்றிப் பார்ப்பது சிரமம்தான் ஆனாலும் அதன் அழகு, கஷ்டத்தை எல்லாம் மறக்கச் செய்து விடும். சுகம் என்பதே தோன்றும். இம் மலையில் ஏறும்போது மனிதன் அடைகின்ற உழைப்பும், களைப்பும் இமயத்தின் எழிலைக் கண்டாலே பறந்து போகும். ரோஜா மலரின் மனம் முள் குத்திய வருத்தத்தை நினைவூட்டுகிறதா? இல்லையல்லவா? அஞ்சத்தக்க இடங்களைக் கடந்து செல்வதிலே எல்லை இல்லா ஆனந்தம் கிடைக்கிறது. இத்தகைய இமாலயத்தை ஒரு முறை பார்த்த மனிதன் இதனை மறக்கவே முடியாது. இமயம் போன்ற மலையை, இயற்கை எழில் கொஞ்சும் மலையை இயற்கை அன்னை வாசம் செய்யும் மலையை வேறு எங்கிலும் நாம் காண முடியாது!

காகவே என்று கொள்க. ஸந்தேஹத்தை விலக்குவதனுலும் லக்ஷணங்களுக்குப் பயனுடைமை கொள்ளப்படுகின்றது; ஏனெனில் லக்ஷணத்தைக் கொண்டு அறியப்படும் பொருளுக்கு உள்ள உண்மை வடிவிற்கு முரணுனதொரு தன்மையைப் பற்றிய ஸந்தேஹம் அப்பொருளில் வரும்போது அதை விலக்கினுலொழிய முற்கூறிய பொருளைப்பற்றிய நிச்சயம் உண்டாக வழியில்லாமையால் என்க. முற்கூறிய மூன்றில் ஏதாவதொன்றே லக்ஷணமாகக் கொண்டால் அது லக்ஷணத்தினுலறியப்படும் பொருளின் வடிவிற்கு முரணுன தன்மையைப்பற்றிய ஸந்தேஹத்தைத் தீர்க்கவல்லதன்றன்றே?

(4) அது தன்னைச் சிறிது விளக்குவோம். உலகப் பிறப்பின் காரணமாயிருத்தலே லக்ஷணமாகக் கூறிய போதிலும், இருப்பிறப்புக்களின் காரணமாயிருத்தலைக் கூருமற் போனுல் அதற்கு வேண்டிய அறிவும் ஆற்றலுமில்லாமையாலும் இருபிறப்புக்களின் காரணமாக வேறெரு பொருள் உள்ளமையாலும் உலகப் பிறப்பிற்கு மட்டும் காரணமான பொருளுக்கு எல்லையில்லாத பெருமையுடைமை இல்லாமற் போய்விடும். மோக்ஷமென்பது இறப்பில் சேர்வதனுலும் மோக்ஷத்தைத் தருமவனுக உபாஸிக்கத் தக்கவனுக்கே முக்தி நிலையில் அடைந்து அனுபவிக்கப்படுந் தன்மையுள்ளதனுலும் மோக்ஷந்தருந் தன்மைக்கும் முக்தி நிலையில் அடைந்து அனுபவிக்கப்படுந்தன்மைக்கும் இன்றியமையாத குணங்களால் ஏற்பட வேண்டிய பெருமை ஸித்திக்காமற் போய்விடும். ஆகையால் உலகப்பிறப்பின் காரணமாயிருத்தலே மட்டும் சொன்னுல் அது மற்றெல்லா பொருள்களைக் காட்டிலும் உள்ள வேறுபாட்டை ப்ரஹ்மத்தினிடம் அறிவிக்க வல்லதேயாயினும், உலகப் பிறப்பிருப்பிறப்புக்களாகிய இச்சமுதாயத்தின் காரணமாயிருத்தலாகிய லக்ஷணமே ப்ரஹ்மத்திற்கு எல்லையில்லாத நிறைந்த பெருமையுடைமையைத் தெரிவிக்க உதவுகின்றமையால் உலகப்படைப்பு காப்பு அழிப்பு ஆகிய இச்சமுதாயத்தின் காரணமாயிருத்தலே ப்ரஹ்மத்தின் லக்ஷணமென்று அறிவிக்கப்பட்டது" என்னுமிதுவே ச்ருத ப்ரகாசிகையுரைப் பகுதியாகும்.

இவ்வுரைப் பகுதிக்கு விளக்கம் இங்ஙனே காண்க:

(1) இங்கு, 'உலகப் பிறப்பின் காரணமாயிருத்தல் இருப்பின் காரணமாயிருத்தல் அழிவின் காரணமாயிருத்தல் ஆகிய இம்மூன்றின் கூட்டம் ப்ரஹ்மத்தின் லக்ஷணமென்பது ச்ருதியின் ஸ்வாரஸ்யத்தினுல் நிச்சயிக்கப்படுகிறது' என்றதனுல் 'எதனுல் இப்பிராணிகள்' என்று தொடங்கும் ச்ருதி வாக்யத்தில் மூன்று வாக்யங்களுக்குப் பின்பு, 'அது ப்ரஹ்மம்' என்று 'அது' என்ற ஒரே சொல்லே

# வைணவ பரிபாஷை

ஆலவட்டம் - விசிறி.
ஆசிர்வாதம் - பெரியோர் வாழ்த்துரை.
ஆதுரம் - ஆர்வம்.
ஆவாஹனம் - ஏதேனும் ஒன்றில் வரவழைத்தல்.
ஆஹுதி - நெய்யினுல் செய்யும் ஹோமம்.
ஆஹுதன் - அழைக்கப்பட்டவன்.
இறக்கம் - மேலிருந்து கீழே இறங்குதல்.
உத்தரணி - வட்டிலிருந்து தீர்த்தம் எடுக்கும் பாத்திரம்.
உத்தரீயம் - மேலே அணிந்து கொள்ளும் துணி.
உத்தராபோசனம் - உணவு உட்கொண்ட பின்னர் தீர்த்தத்தை மந்திரம் சொல்லி உட்கொள்ளுதல்.
உபஹாரம் - கோயிலுக்குச் செல்லும்பொழுது உடன்கொண்டு செல்லும் பூ, பழம், தேங்காய் முதலியன பெறுதல்.
உபவாசம் - பட்டினிக் கிடத்தல்.
உபநயனம் - பூணூல் அணிந்து, பிரம்மோபதேசம் பெறுதல்.
உபயவிபூதி - நிலவுலகும் நித்திய (பரம) உலகும்.
உஷ்ணோதகம் - வெந்நீர்.
உபதம்சம் - ஊறுகாய்.
ஈரவாடை - நனைந்த ஆடை.
ஈசான்யம் - வடகிழக்கு.
ஈரவாடை தீர்த்தம் - பகவானின் வஸ்திரத்திலிருந்து பிழியப்படும் தீர்த்தம்.
உதக சாந்தி - சாந்தி அளிக்கும் தீர்த்தம்.
உபேக்ஷை - கவனியாதிருத்தல்.
உரகம் - பாம்பு.
ஏகாந்தம் - இரகசியம்.
எழுந்தருளப்பண்ணுதல் - ஸாளக்ராமம் முதலிய விக்ரஹங்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றுதல்.
ஏகாதசி - விஷ்ணுதிதி.
ஏகாங்கி - தனி மனிதன்.
ஐதிஹ்யம் - கர்ண பரம்பரையாகக் கூறப்படும் நிகழ்ச்சி.
ஓரைகள் - புளிசாதம் போன்ற கலப்பு சாதங்கள்.
ஔபாஸனம் - திருமணமானவர் தினமும் செய்ய வேண்டிய ஹோமம்.

முன்புள்ள மூன்று வாக்யங்களிலுள்ள எதனுல் எதனுல் எதனில் என்றுள்ள மூன்று சொற்களுக்கும் ப்ரதி நிர்த்தேசமாக (=மூன்று சொற்களின் பொருள்களையும் சேர்த்துக் குறிப்பிடும் எதிர்ச் சொல்லாக) இட்டுள்ள தனுலும் அதனுல் உலகப் பிறப்பிருப்பிறப்புக்களாகிய ஸமுதாயத்தின் காரணமாயிருத்தலையே குறித்தலாலும் முற்கூறிய ஸமுதாயத்தின் காரணத்துவமே ப்ரஹ்மத்தின் லக்ஷணமென்று வேத சப்தத்தின் இயற்கைச் சுவையினுல் அறியப்படுகின்றதென்று கூறப்பட்டது-என்ற இவ்விஷயந்தான் 'எதனுல் இப்பிராணிகள் உண்டாகின்றனவோ' என்று தொடங்கி 'என்று கூறப்பட்டுள்ளது' என்பதிருன பகுதியினுல் விளக்கப்பட்டது.

(2) ஐயா, ச்ருதியினுல் ஸமுதாயத்தின் காரணமாயிருத்தலே ப்ரஹ்ம லக்ஷணமென்று அறிவிக்கப்பட்ட போதிலும் ஸூத்ரகாரர் அதனை லக்ஷணமாகக் கருதுவது தகாது; உலகப் பிறப்பு முதலியவற்றில் ஒவ்வொன்றின் காரணமாயிருத்தலாகிய சிறிய லக்ஷணமே ப்ரஹ்மத்தைப் பிற பொருள்களிலிருந்து வேறுபட்டதாக அறிவிக்க வல்லதாகையால் அதற்கே லக்ஷணமாகுந்தன்மை பொருந்துதலால்-என்று, 'மூன்றும் சேர்ந்து' என்று தொடங்கி, 'என்றுகேட்டால்' என்னுமளவான பகுதியினுல் கேள்வி கேட்டு,

(3) வேத சப்தத்தினுல் பிறப்பிருப்பிறப்புக்களாகிய ஸமுதாயத்தின் காரணமாயிருத்தலே போதிக்கப்படுதலால் அவ்வேதத்தின் பொருளை நிச்சயிப்பதற்காக முனைந்த ஸூத்ர காரராலும் அவ்வேத வாக்யத்தைப் பின்பற்றி அதுவே லக்ஷணமென்று சொல்லப்பட்டதென்று விடை கூறுகிருர்-'ஆம், உண்மைதான்' என்று தொடங்கும் பகுதியால். ஐயா, ச்ருதியில்-உலகப் பிறப்பின் காரணமாயிருத்தல் முதலிய ஒவ்வொன்றே லக்ஷணமென்று சொல்லுவதை விட்டு மூன்றும் சேர்ந்தே லக்ஷணமாகச் சொல்லுவதற்கு என்ன காரணம்? என்ற கேள்விக்கு 'ச்ருதி தான்' என்று தொடங்கி விடையளிக்கிருர். 'அந்த ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்' என்று அடுத்த வாக்யத்தில் உபாஸனத்தை விதிக்க விரும்பியதனுலும், தனக்கு மேலெல்லையில்லாத பெருமையோடு கூடியதாக ப்ரஹ்மத்தை உபாஸிக்க வேண்டியிருப்பதனுலும், அத்தகைய பெருமையை மூன்றும் சேர்ந்த லக்ஷணத்தைக் கொண்டே நிச்சயிக்க வேண்டியுள்ளதனுலும், அம்மூன்றில் ஏதாவதொன்றை மட்டுமே லக்ஷணமாகச் சொன்னுல் மற்ற இரண்டுக்கும் தேவைப்படுகின்ற குணங்களில்லாமையால் வருகிற பெருமையின்மையின் ஸந்தேகம் ப்ரஹ்மத்தினிடம் தோன்றுதலால் அதனைக் களைந்தெறிந்தாலன்றி எல்லையில்லாத பெருமையை ப்ரஹ்மத்தினிடம் நிச்சயிக்க முடியாமையாலும் ச்ருதியில் மூன்றும் சேர்ந்தே லக்ஷணமென்று கூறப்பட்டதென்று கருத்து.

(4) ப்ரஹ்மத்தினிடம் லக்ஷணத்தினுல் அறியவேண்டிய எல்லையில்லாப் பெருமைக்கு முரணுன பெருமையின்மையைப் பற்றிய ஸந்தேகம் தோன்றினுல் அதனைத் தீர்க்கும் வல்லமையானது மூன்றும் சேர்ந்த லக்ஷணத்திற்கே உள்ளது; தனித்தனியான ஒவ்வொன்றுக்கு மட்டும் இல்லையென்பதை மூதலிக்கிருர் - 'அது தன்னைச் சிறிது விளக்குவோம்' என்று தொடங்கும் இறுதிப் பகுதியால். (இந்த நான்கு பகுதிகளும் முற்காட்டிய ச்ருதப்ரகாசிகையுரையின் நான்கு பகுதிகளுக்கும் விளக்கமாகும்.)

இதுகாறும் பரக்கக் கூறியவற்றிற்குச் சுருக்கமான கருத்து இது- உலகப் பிறப்பு உலக விருப்பு உலக விறப்பு என்னும் இச்சமுதாயத்தின் காரணம் ப்ரஹ்மம் என்று கூருமல், உலகப் பிறப்பின் காரணம் ப்ரஹ்மம் என்று கூறினுல், கேட்கும் சிஷ்யனுக்கு-இது பிறப்பின் காரணமாகுமானுல் இருப்பின் காரணம் மற்றென்று இருக்கும், அவ்வாறே இறப்பின் காரணமும் வேறென்று இருக்கும். ஆகையால் நாம் உபாஸிக்க வேண்டியது உலகப் பிறப்பின் காரணத்தையா இருப்பின் காரணத்தையா அல்லது இறப்பின் காரணத்தையா என்று ஸந்தேகம் உண்டாவதனுல் உபாஸிக்கத்தக்க ப்ரஹ்மம் இதுதானென்னும் நிச்சயம் ஏற்படாது. மேலெழுந்தவாறு நோக்கினுல் நம்மெல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவர்களாகத் தோன்றுகின்ற அக்நி இந்திரன் முதலிய தேவர்களுக்குள் தனக்கு மேலெல்லையில்லாத பெருமையையுடைய தேவன் இன்னுனென்று அறிந்து கொள்ள விருப்பத்தினுலல்லவா 'பகவானே ப்ரஹ்மத்தை அறிவிக்கக்கடவீர்' என்று ப்ருகு வருணரைக் கேட்டது. அப்படிப்பட்ட பெருமையை அறிவிப்பதன் வாயிலாக அந்த ஆள் இன்னுனென்று நிச்சயிப்பதற்காகவே 'எதனுல் இப்பிராணிகள் உண்டாகின்றனவோ' என்றிது முதலிய ச்ருதி வாக்யம் எழுந்தது. தனக்குமேலெல்லையில்லாத பெருமையை அறிவித்தலென்பது முற்கூறிய மூன்றுக்கும் காரணமாயிருத்தலை ப்ரஹ்ம லக்ஷணமாகச் சொல்லாவிட்டால் முடியாத காரியமாகும். பிறப்பின் காரணமாயிருத்தலை மட்டும் கூறினுல், இருப்பிறப்புக்களின் காரணமாயிருத்தற்கு இன்றியமையாது வேண்டிய குணங்களில்லாமையால் இந்தப் பிறப்பின் காரணமான ப்ரஹ்மத்திற்குத் தனக்கு மேலெல்லையில்லாத பெருமை உண்டோ இல்லையோ என்ற ஐயம் உண்டானுல் அதனைப் போக்க முடியாதன்ருே? (என்பது கருத்து).

(தொடரும்)

# அழகிய மணவாள மாமுனிவன்

திரு வி. இராகவன்-பள்ளத்தூர்.

'ஸர்வலோக சரண்யன்', 'பிரதம ஆசாரியன்' என்றெல்லாம் போற்றிப் புகழப் பெறும் லக்ஷ்மிநாதன் உள்ளத்தே விநோதமான ஆசை தோன்றியது போலும்! எல்லா உலகத்தினரும் தன் திருவடி சரண மடைந்து அதனால் இன்பமடைகின்றனர். வேத முதல்வனாகிய தான் உலகைப்படைப்பதற்குமுன் பிரும்மாவைப் படைத்து 'பீதாவாடைப்பிரான் பிரமகுருவாகி' என முதல் ஆசாரியனாய் அவனுக்கு வேதத்தை உபதேசித்தான். தான் சரண்யனாகவும் ஆசாரியனாகவும் இருந்து அதனால் ஏற்பட்ட இன்பத்தையனுபவித்தானே தவிர, சரணடைந்தவர்களும் உபதேசம், பெற்றவர்களும் அடைந்த இன்பத்தினை இதுகாறும் அனுபவித்ததில்லையே. ஆகவே தான் எடுக்கப் போகும் அவதாரங்களில் இவ்வின்பத்தை அனுபவிப்பது எனத் திருவுள்ளம் கொண்டான் போலும்!

இராமாவதாரத்தில் இராமனான தான் பிரும ஞானியான வசிஷ்ட்ட மாமுனியை ஆசாரியனாகக் கொண்டான். முன் விரோதம் காரணமாக விசுவாமித்ரமுனி, வசிஷ்ட்டரின் குமாரர்களையெல்லாம் கொல்லும் படிச் செய்வித்தார். புத்திர சோகம் தாளாத 'பிரம ஞானி' தன்னை மாய்த்துக் கொள்ள பல வழிகளிலும் முயன்றார். ஞானியான இவரிடம் அஞ்ஞானமே மிகுந்திருந்ததால் ஆசாரியப் பூர்த்தியைக் கண்டானில்லை.

யாக்த்தைக் காப்பதற்கெனச் சென்ற இராமன், ஆசாரியனாக விசுவாமித்திரமுனியை ஆச்ரயித்து பல கலைகளையும் அவரிடமிருந்து கற்றுணர்ந்தான். 'பிரும ரிஷி'யென அழைக்கப்பெற வேணுமென ஆசை கொண்டு பொன்னே போன்ற காலத்தை விசுவாமித்ரர் வீணே போக்கினார்! மேனகையின் மேனியழகிலே மனத்தைப் பறி கொடுத்து இராப்பகல் என்றிராது எப்பொழுதும் அவள் மோக வலையில் விழ்ந்து மயங்கிக் கிடந்தார். ஆக தவ சிரேஷ்டரான இவர் வைராக்யமின்றிக் கிடந்ததும் ஒரு குறையாயிற்று!

தன் தமையன் வாலியால் நாட்டை விட்டுத் துரத்தப்பட்ட சுக்ரீவன் ருச்ய முக பர்வதத்தைப் புகலிடமாகக் கொண்டான். பிராட்டியைப் பிரிந்த இராமனோ 'புகலடைந்த' இவன் சகாயத்தை நாடி இவனைச் சரணடைந்தான். இவனோ தான் இழந்த நாட்டையும், தன் மனைவியையும் மீட்டுத் தருமாறு இராமனை வேண்டினான். தன் நாட்டையும் தன் மனைவியையும் மீட்டுக் கொண்ட போதிலும் இராமனுக்குக் கொடுத்தன் வாக்கையும் மறந்து சிற்றின்பக் கேளிக்கைகளில் மூழ்கிக் கிடந்தான் சுக்ரீவன். இதனால் சீற்ற மிலா இராமனுக்கும் இவன் பால் சீற்றம் ஏற்பட்டது. முன்னரே புகலடைந்த இவனிடம் தான் சரணடைந்ததும், சரண்யனான அவனிடம் தான் சீற்றம் கொண்டதும் தான் சரணடையும் திறத்தில் குறைகளாயிற்று!

கிருஷ்ணாவதாரத்திலோவெனில் கிருஷ்ணனான தான் சாந்தீபினி என்னும் மறையோனிடம் குருகுலவாசம் புரிந்து வேத சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தான். கண் முன்னே நிற்கும் கண்ணனின் அமுதினிலும் இனிய கோலத்தைக் கண்டுகளித்திடாது என்றோவொரு நாள் ஆழ்கடலில் மூழ்கி மாண்டு போன தன் புத்திரனைக் குரு தக்ஷிணையாக உயிரோடு மீட்டுத் தருமாறு கோரினார். இங்கும் ஆசாரிய லக்ஷணத்தில் குறைவைக் கண்டான்!

இவ்வாறு தான் சிஷ்யனாய் அண்டின எவரிடத்தும் நிறைவைக் காணாமையாலே ஆசார்ய பூர்த்தியுடைய ஓர் புருஷனைச் சரணமடைய வேண்டும் என்றும் விருப்பம் மேலோங்கியது போலும்!

"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்— என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம்புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு"
(முதல் திருவந். 53)

என்றவாறு கைங்கர்யமே அறியாத செல்வம் என்றிருக்கும் அனந்தன் பால் சிந்தனை ஓடியது. இராமாவதாரத்தில் தனக்குத் தம்பி லக்ஷ்மணனாகத் தோன்றிப் புரிந்திட்ட தொண்டில் மகிழ்ந்தான். கிருஷ்ணாவதாரத்தில் தன் தமையன் பலராமனாகக் கொண்டு தான் அவனுக்குத் தொண்டு புரிய முனைந்தும் அண்ணனாய் அவன் செய்த கைங்கர்யமே இவனை மகிழ்ச்சிக் கடலிலாழ்த்தியது. ஆகவே அனந்தனை நோக்கி 'நீர் இருநூறு ஆண்டுகள் பூமியில் தோன்றி ஆசாரியனாக இரும்' என நியமனம் செய்தான். அந்நியமனம் கொண்டு அனந்தனும் இப்புவியில் நூற்றிருபது ஆண்டுகள் இராமானுசராகவும், எஞ்சி நின்ற எண்பதாண்டுகள் அழகிய மணவாள மாமுனிகளாகவும் தோன்றிப் பிரகாசித்தான்.

இராமநாதபுரம்-முதுகுளத்தூரையடுத்து உள்ளது சிக்கள்கடாரம் என்னும் சிற்றூர். ஆங்கு 'கோமடம்' என்னும் திருவம்சத்தைச் சேர்ந்த

கழக்கிடந்தான் திருநரவீனுடைய பிரான் தாதரண்ணர், ஸ்ரீரங்கநாச்சியார் என்னும் திவ்ய தம்பதியர் வாழ்ந்து வந்தனர். பதின்மூன்றும் நூற்றாண்டின் மத்திம காலத்தில் மதுரை மண்டலத்தில் ஏற்பட்ட அரசியல் கொந்தளிப்பால் மதுரை மற்றும் அதைச் சுற்றியுள்ள பிரதேசங்களிலுள்ள அந்தணர்கள் வேறு இடங்களை நாடிச் சென்றனர். அவ்வாறே இத்தம்பதியரும் திருநெல்வேலிச் சீமை ஆழ்வார் திருநகரியையடைந்தனர். திருக்குருகூர் என்றழைக்கப்பட்ட அவ்வூர், நம்மாழ்வார் அவதரித்த காரணத்தால் ஆழ்வார் திருநகரி என அழைக்கப்படுகிறது. ஆழ்வார் அவதரித்த அத்திருப்பதியிலேயே மணவாள மாமுனிகள் தோற்றமும் நிகழ வேண்டுமென்பது எம்பெருமான் திருவுள்ளம் போலும். ஆகவே ஆழ்வார் திருநகரியையே தற்காலிக் வாச ஸ்தலமாகக் கொண்டனர். கி. பி. 1370ம் ஆண்டு சாதாரண வருஷம் ஐப்பசி மாதம் மூல நக்ஷத்திரத்தில் ஆதிசேடன் அத்திவ்ய தம்பதியருக்குக் குமாரனாய் அவதரித்தான். அழகிய மணவாளன் எனத் திருநாமம் சூட்டி உரிய காலங்களில் உபநயனம், திருமணம் இவற்றை நடாத்திக் களித்தனர் பெற்றோர். கற்றுத் தேர்ந்த நற்குலத்தில் தோன்றிய அவர் தன் தகப்பனாரையே பிரதம குருவாகக் கொண்டு முறையோடு பயின்று, நெறியோடு நின்று சொல்லார் தமிழ் ஒரு மூன்றும், சுருதிகள் நான்கும், எல்லையில்லா அறநெறிகள் யாவும் ஓதியுணர்ந்தார்.

பிள்ளை லோகாசாரியரின் சீடரும், ஸ்ரீசைலேசர், திருமலையாழ்வார் என்றும் நம்மாழ்வாரின் ஈரச் சொற்களில் ஊறித் திளைத்த பக்தி காரணத்தால் திருவாய் மொழிப்பிள்ளை எனச் சிறப்பித்து அழைக்கப் பெறும் பெரியார் இவருடைய ஆசாரியர் ஆவார். அவரும் இவரை 'ஆம் முதல்வன்' எனக்குளிரக் கடாக்ஷித்து, தம் சேமவைப்பான அர்த்த விசேடங்களை எல்லாம் முறையாக உபதேசித்தருளினார். "புகழ்மலிந்த பாமன்று மாறன் அடி பணிந்துய்ந்த" என நம்மாழ்வார் திருவடிப் பணிந்து உய்ந்தவரான இராமாநுசருக்குத் திருக்குருகூரில் இராமாநுச சதுர்வேதி மங்கலம் என்னும் திருவீதியோடு ஒரு கோவில் கட்டினார். அங்கு இராமாநுசன் அடி தொழும் பெரியோர்களைக் குடியமர்த்தினார். இக்கோயிலின் நிர்வாகத்தினையும் அழகிய மணவாளரிடம் ஒப்புவித்தார். இராமாநுசரிடம் இவருக்குள்ள ஈடுபாட்டினைக் கண்ணுற்றுத் திருமலையாழ்வார் 'யதீந்த்ரப் பிரவணர்' என்றும் திருப்பெயரைச் சூட்டினார். மேலும் இராமாநுசர் விஷயமாக ஓர் நூலும் இயற்றும்படியாகப் பணித்தார். இதனைச் சிரமேற்கொண்டு, வடமொழியில் இருபது சுலோகங்கள் கொண்ட 'எதிராசவிம்சதி' என்னும் நூலையும் ஆசாரியன் மன மகிழும்படி இயற்றினார். இந்நூல் சிறிதாயினும் இருமொழிக் கவிதைத் திறமையும் பிரகாசித்துக் கொண்டு சொல்லோவியமாக அமைந்துள்ளது எனப் பெரியோர் பணிப்பர்.

அன்றோர் தினம், இராமாநுசர் தோன்றிய திருவாதிரைத்திருநாளாக விருக்க, ஆசார்யரும் சீடரும் அவரை நினைந்து பக்தி மேலீட்டால் நெஞ்சுருகிக் கண் பனித்திருப்ப,

" இன்றோ எதிராசர் இவ்வுலகில்
தோன்றிய நாள்
இன்றோ கலியிருள் நீங்கு நாள்-
இன்றோ தான்

என ஆசாரியன் நாவினின்றும் மலர மேலும் சொல்ல மாட்டாது அவ்வானந்த அனுபவத்தில் திளைத்து மயங்கிக் கிடக்க, நம் மணவாளரோ ஆசாரியன் அகங்குளிர,

" இன்றோதான் வேதியர்கள் வாழ
விரை மகிழோன் தாள் வாழ
வாதியர்கள் வாழ்வடங்கு நாள்"

என அப்பாவினை முழுமை செய்தார்.

அழகிய மணவாளரின் அவதார விசேஷத்தை அறிந்திருந்த திருமலையாழ்வார் அதனைத் தனக்குக் காட்டுமாறு கோர, அரவரசுப் பெருஞ்சோதியான தன் உருவைக் காட்டினார். பீதியுற்ற ஆசாரியர் கோரியவாறு அவ்வுருவை மறைத்து முன்போன்று அழகிய மணவாளராக எழுந்தருளினார். இது நிகழ்ந்தது திருமலையாழ்வார் அவதரித்த இடமான மதுரையையடுத்த குந்தி நகரமென்னும் கொந்தகை என்னும் ஊரில். அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தெய்வநாயகப் பெருமாள் மாமுனிகள் வீற்றிருக்கும் கோலத்திலும், உற்சவர் ஐந்து தலை நாகமுடி மணவாள மாமுனி விக்ரஹமும், இதிஹாஸ மறியாதவர்களும் அழகிய மணமாள்ர் ஆதிசேடாம்சம் என்பதை அறிவிப்பதுபோல் எழுந்தருளியிருக்கிறார். அடுத்து செங்கோலுடன் அழகு பொலியத் திருவாய்மொழிப் பிள்ளை சிலா விக்ரஹமும் உற்சவ மூர்த்தியும் எழுந்தருளியிருப்பதும், செங்கோல் கையிலேந்திய பாண்டிய மன்னனுக்கு மந்திரியாயிருந்ததை நினைவூட்டுவதாக அமைந்திருக்கிறது!

'ஆழ்வான், பட்டர், நம்பிள்ளை முதலான நம் முன்னோர்கள் எல்லா சாஸ்திரங்களையும் முற்றும் கற்றுணர்ந்தவராயிருந்தும் ஆழ்வார்களின் ஈரச் சொற்களில் ஊறித் திளைத்து அவற்றை உலகினில் பரப்புவதையே சிறந்த தொண்டாகக் கொண்டிருந்தனர். அது போன்று வடமொழியில் பல காலும் கை வையாது நமக்கும் எம்பெருமானார்க்கும் பிரியமாய் திருவாய் மொழி முதலிய அருளிச் செயல்களிலேயே ஊன்றி மாறன் உரை செய்த தமிழ் மறையை வளர்ப்பீராக. திருவரங்கத்தையே நித்ய வசமாய்க் கொண்டு மாறன் தமிழ் வளர்த்துப் பெருமாளுக்கு மங்களா சாஸன பாராகக் கடவீர்' எனப் பணித்தார். அவ்வாறே அழகிய மணவாளரும் திருவரங்கத்தையே நித்ய வாசமாய்க் கொண்டார்.

திவ்ய தேச யாத்திரையாய் பல திவ்ய தேசங்களைச் சேவித்துக் கொண்டு, காஞ்சியில் வரதராஜப் பெருமாளையும் சேவித்து அவனழகில் ஈடுபட்டு வடமொழியில் 'தேவராஜ மங்களம்' என்னும் நூலையும் இயற்றினார்.

"நாமார்! பெரிய திருமண்டபமார்! நம் பெருமாள்
தாமாக நம்மைத் தனித்தழைத்து—'நீ மாறன்
செந்தமிழ் வேதத்தின் செழும் பொருளை நாளுமிங்கு
வந்துரை' என்று ஏவுவதே வாய்ந்து"

என மாமுனிகளே அருளியவாறு 'நாளை முதல் நம் பெரிய திருமண்டபத்தில் மாறனருளிய திருவாய்மொழிப் பொருளை ஈடு முப்பத்தாறுயிரத்தோடு நடத்தும்' எனத்திருவரங்கனும் நியமித்தான். ஓராண்டு காலம் நிகழ்த்தப் பெற்ற காலக்ஷேபத்திற்கும் தானும் எழுந்தருளியிருந்து செவி சாய்த்தருளினன். மனம் உவந்தவனாய் "முப்பத்தாறுயிரப் பெருக்கர்" என்னும் திருப்பெயரையும் சாற்றியருளினன். 'தேசுடைத்தேவர் திருவரங்கச் செல்வனார்' மாணக்கன் போன்று ஈடு காலக்ஷேபம் கேட்டமையால் குரு தக்ஷிணை கொடுப்பவன் போன்று சாற்று முறையன்று (நூல் முடிவு பெறும் அன்று) நாலைந்து வயது அந்தணச் சிறுவனாக அவை நடுவே தோன்றி கைக் கூப்பி நின்று,

"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்தியாதி குணார்ணவம்
யதீந்த்ரா ப்ரவணம் வந்தே ரம்யஜா மாதரம் முநிம்"

என உரத்த குரலில் சொல்லி, மெய்யன்பர்கள் கேட்டு மெய் சிலிர்த்துக் கிடக்கையில் உடன் மறைந்தான். 'சைலம்' என்று மலைக்குப் பெயர். சர்வேசுவரனே விரும்பிச் சென்று நித்ய வாசம் பண்ணும் பெருமையுடைய மலை திருவேங்கடமலை. அதற்கு ஈசன் ஸ்ரீநிவாசன். ஆகவே திருவாய்மொழிப் பிள்ளைக்கு இயற்பெயர்

## திருமலை மீது நின்ற திருமாலே!

**ஸ்ரீ தேவி தாஸன் — மதுராந்தகம்**

இடையூர் மலைமீது நின்றனை—எம்கோவிந்தா!
இடையறுது இன்பங்கள் தந்தனை
இன்றென்றும் துன்பங்கள் துடைத்தனை
இம்மையில் உனையன்றி வேறேது துணை
மாநிலம் காக்கவே வந்தனை — எம்கோவிந்தா!
மாமலை மீதேறி அமர்ந்தனை
மாந்தரின் மனயிருள் அகற்றினை
மாதவா! உனையன்றி வேறேதுதுணை
திருமலை மீதினில் திகழ்ந்தனை—எம்கோவிந்தா!
திருவாழி சங்கமும் தரித்தனை
திருவரத அஸ்தமும் காட்டினை
திருக்கடி அஸ்த அமுதூட்டினை
திருமுக எழிலால் துயர் ஓட்டினை—எம்கோவிந்தா!
திருமேனி பொழிலாய் மலர்சூட்டினை
திருப்பாதம் பற்றவே மனம் திளைத்தனை
திருமாலே! உனையன்றி வேறேதுதுணை
நின்றகால் நோகவோ நின்றனை—எம்திருமாலே!
நின்றகால் அனுதினம் காட்டினை
நின்றகால் பற்றவே நின்றனை
நின்றகால் பற்றுவோம் நின்தனை
நின்றகால் பட்டதே இடைமலை—எம்கோவிந்தா!
நின்றகால் தொட்டதே மனநிலை
நின்றகால் கிட்டவே பணிந்திடு
ஆழ்கடல் மீதுதுயில் அரங்கனே!
ஆழ்ஆழி கரையின்றி நின்றதே
ஆழ் ஸம்ஸாரக்கடல்சூழ் மாந்தரே
ஆரமுதன் தாள்பற்றி கரை சேர்வீர்!

ஸ்ரீசைலேசர் என்பது... 'ஸ்ரீசைலேசரின் இன்னருளுக்கு இலக்கானவரும் ஞானம் பக்தி வைராக்யம் இவைகளால் கடல் போன்றவரும் யதீந்திரரான இராமாநுசரிடம் அயராத பக்தி கொண்டவருமான அழகிய மணவாள மாமுனியை வணங்குகிறேன்' என்று பொருள் கொண்ட இத்தனியனைச் சொல்லி வணங்கி அன்று ஆசார்ய பூர்த்தியிலே குறை கண்டவன் இன்று நிறைவு கண்டு மகிழ்ந்தான்! திருவரங்கனின் தேனே போல் தித்திக்கும் திருப்பவளத்தினின்றும் உதிர்ந்த இம்மந்திரம் நாடும் நகரமும் நன்கறிய வேதத்திற்கு 'ஓம்' என்பது போல், திவ்ய ப்ரபந்தங்களுக்கு முன்னும் பின்னும் ஓதப்பெறும் பெருமை பெற்றுத் திகழுகிறது. ஆசாரியப் பூரணத்வம் உடைய ஆசாரியனைச் சரணடைந்து இன்பமடைய வேணும் என்னும் தன் மனோரதத்தையும் இன்று நிறைவு செய்து கொண்டான்!

இராமாநுசர் துறவறம் கொண்டது அவர் மனைவியோடு கொண்ட பிணக்காலே. இல்லறத்தை நல்லறமாகக் கொண்ட இவர், நிறைந்த உறவினரின் சூதகம் போன்ற தீட்டுக்

களால் பகவதாராதனத்திற்கும் கால க்ஷேபத்திற்கும் ஏற்படும் இடையூறுகளை நீக்க துரீயாச்ரமத்தை மேற்கொண்டார். அது முதற்கொண்டு அழகிய மணவாள மாமுனிகள் எனத் திருப்பெயர் வழங்கலாயிற்று.

இவரை ஆசாரியனுக வரித்து உய்ந்தவர்கள் பற்பலர் ஆவர். அவர்களில் சிறப்பாக 'அஷ்டதிக்கஜங்கள்' என அழைக்கப் பெறும் கீழ்க்காணும் எண்மராவர்.

1. வானமாலை ஜீயர், 2. பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர், 3. திருவேங்கட ராமானுஜ ஜீயர், 4. கோயில் கந்தாடை அண்ணன், 5. பிரதிவாதி பயங்கரம் அண்ணன், 6. எறும்பியப்பா, 7. அப்பிள்ளை, 8. அப்பிள்ளார்.

வேத வேதாந்தங்களின் கருத்துப் பொருளையும் பெரியோர்களின் பொன் மொழிகளையும் அவர்கள் நடந்து காட்டிய ஒழுக்கங்களையும் தொகுத்து ஸ்ரீமத் பிள்ளை லோகாசார்யரால் அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீவசன பூஷணம் என்னும் நூலுக்கு அருமையான ஓர் வியாக்யானமும், பத்ரிகாச்ரமத்தில் நர நாராயணனுய் வெளியிட்ட 'திருமந்திரம்', பரமபதத்திலே பிராட்டி விஷயமாய் அருளிய 'துவயம்', தேர்த் தட்டிலே அர்ச்சுனனுக்கு உபதேசித்த 'சரம சுலோகம்' ஆகிய ரகசியத்ரயம் எனப்படும் இவற்றை விளக்க 'முமுக்ஷுப்படி' என்னும் நூல் அமைந்தாலும் பெண்ணும் பேதையும் அறிந்து கொள்ளலாம்படி ஓர் வியாக்யானமும், 'சித்து', 'அசித்து', 'ஈஸ்வரன்' எனும் இம்மூன்றனையும் விளக்கும் நூலாகிய 'தத்துவத்ரயம்' என்பதற்கு ஓர் வியாக்யானமும், மயர்வற மதி நலமருளப் பெற்ற மாறனின் மறைத் தமிழிலே மனத்தைப் பறிகொடுத்த லோகாசாரியாரின் தம்பியான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் அருளிய 'ஆசார்ய ஹ்ருதயம்' என்னும் நூலுக்கு வியாக்யானமும் பெரியாழ்வார் திருமொழிக்குப் பெரிய வாச்சான்பிள்ளை அருளிய வியாக்யானம் 401 பாசுரங்களவிலே கரையானுக்கு இரையாக, அதனை நிறைவு செய்யும் வண்ணம் வியாக்யானமும் அருளிச் செய்தார். திருவரங்கத் தமுதனுரின் பிரபன்ன காயத்ரி எனப்படும் 'இராமாநுச நூற்றந்தாதி' என்னும் நூலுக்கு ஓர் உரையும், அருளாளப்பெருமாளெம்பெருமானுர் அருளிய 'ஞான சாரம்', 'பிரமேய சாரம்' என்னும் நூல்களுக்குத் தக்க வடமொழி சுலோகங்களையும் தொகுத்து ஓர் உரையும் இட்டருளினுர்.

நம்மாழ்வாரின் திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களும் நூறு பதிகங்களானது. இவர் ஒவ்வொரு பதிகத்தின் சாரப் பொருளையும் எடுத்து, ஒவ்வோர் பதிகத்தின் முதல் சொல்லே ஒவ்வோர் பாசுரத்திற்கும் முதற் சொல்லாக வமைத்து, நம்மாழ்வார் திருநாமமும் துதியுடன், பதிகத்தின் கடைசிச் சொல்லே பாசுரத்தின் கடைச் சொல்லாக வமைத்துத் தொடுத்தப் பாமாலையே 'திருவாய் மொழி நூற்றந்தாதி' எனப்படும். மேலும் 'உபதேச ரத்னமாலை', 'ஆர்த்திப் பிரபந்தம்' என்னும் நூல்களையும் அருளிச் செய்தார்.

வாதிட வல்லரேயாயினும் வாதினைத் தவிர்த்த இவர் வாதிடும் பொழுது மாற்றுக் கருத்துடையோர் மனம் நோகாத வண்ணம் தன் கருத்தினை வலியுறுத்தி நிலைநாட்டிடும் 'விசத வாக்சிகாமணி' எனச் சிறப்பித்துப் பெருமையுறும் வண்ணம் பண்பு நிறைந்த ஆசாரியப் பெருமான் இவரே! 'குணமில்லை, விக்ரஹமில்லை, விபூதியில்லை' என்று சொல்லுகிறவர்கள் எல்லோரும் நிரஸ்தர் இப்பாட்டாலே. அவர்களை விரோதிகளாகச் சொல்ல வேண்டாவிறே, ஸ்வபக்ஷத்தை ஸ்தாபிக்கவே பரபக்ஷம் நிரஸ்தமாமிறே. நெல் செய்யப் புல்தேயுமா போலே தன்னடையே நிரஸ்தராவார்களிறே அவர்கள்' என்னும் அவர் வாக்கே இதற்கெடுத்துக் காட்டு.

எழுபத்து மூன்றுண்டுகள் அருட்பணிபுரிந்து கி.பி. 1443 மாசி மாதம் கிருஷ்ண பக்ஷம் சனிக்கிழமை துவாதசி திருவோண நக்ஷத்திரத்தில் திருநாட்டிற்கு எழுந்தருளினுர். திருவரங்கன் தன் கோவிலில் இன்றும் இத்திதியில் 'தீர்த்தத் திருநாள்' கொண்டாடுகிறன். இது மற்ற எந்த ஆசாரியருக்கும் இல்லாத ஒரு சிறப்பு!

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில் எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெருதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க்கடிதத்தில் மணியார்டர் எண், செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறேம்.

— ஆசிரியர்.

# விவேகம்

சுகி

பொறுத்தற்கரிய சோகமான சம்பவங்களுக்கிடையில் மனத் தெளிவுடன் உரையாடுவதும் செயல்படுவதும் விவேகமெனப்படும். இந்த அருமையான நட்பண்பை வால்மீகி மஹரிஷி சுமித்ரை, மந்தோதரி ஆகிய இரு பாத்திரங்களின் மூலம் மிகவும் ஆச்சர்யமான வகையில் விளக்கி இருக்கிறார்.

சீதை, இராமன், இலக்ஷ்மணன் ஆகிய மூவரும் வனத்திற்குப் புறப்படும் முன்னர், கடைசியாகக் கௌஸல்யை வணங்குகின்றனர். அதன் பிறகு அருகிலிருக்கும் சுமித்ரையை இலக்ஷ்மணன் தெண்டனிடுகிறான். கண்களில் நீர் வழியச் சுமித்ரை தனயனைக் கட்டி அணைத்து உச்சி மோந்து அவனிடம் கூறும் ஹிதமான வார்த்தைகள் அவளுடைய உன்னதமான விவேகத்தைக் குன்றின்மேல் வைக்கப்பட்ட விளக்கெனப் பிரகாசப்படுத்துகின்றன. இலக்ஷ்மணனைப் பார்த்து, "ஸ்ருஷ்டஸ்த்வம் வனவாஸாயஸ்வனுரக்தஸ்ஸுஹ்ருத்ஜநே| ராமேப்ரமாதம் மாகார்ஷீபுத்ரப்ராதரிகச்சதி||" குழந்தாய்! நீ வனவாஸத்திற்காக(வே)படைக்கப்பட்டுள்ளாய். அன்பிற்கிடமான தமையன் செல்லும்போது (வனப்ரதேசங்களில்)-நீ எள்ளளவும் அஜாக்ரதையாக இருந்து விடாதே' (அயோ-40-5) என்று எச்சரித்து, மேலும் 'துக்கத்திலும் சுகத்திலும் அவனே உனக்குக் கதி. மூத்தவனுக்கு அடங்கி இருப்பதும் நடப்பதும் உலகில் விசேஷமான செயல்களாகக் கருதப்படுகின்றன. இந்த வழக்கம் இக்ஷ்வாகு குலத்தோர்க்கு அனாதியாகவும் இயற்கையாகவும் அமைந்துள்ளது. ஆகவே, ('ராமம் தசரதம் வித்திமாம் வித்திஜனகாத்மஜாம்| அயோத்யாம் அடவீம் வித்தி கச்சதாதய்தா சுகம்||) 'இராமனைத் தசரதராகவும், சீதையைத் தாயாகவும், வனத்தை அயோத்தியாகவும் அறிந்து (மதித்து) சுகமே சென்று வருவாயாக' (அயோ. 40-9) என்று தன் துயரத்தினிடையில் உற்சாகப்படுத்துகிறாள்.

ரதமேறிச் செல்லும் மூவரையும் தொடர்ந்து சிறிது தூரம் சென்று தசரதன், கௌஸல்யையுடனும், சுமித்ரையுடனும், கௌஸல்யையின் அரண்மனைக்குத் திரும்புகிறார். ஸ்ரீராமனின் பிரிவைத் தாளாமல் தசரதன் கதறிக் கொண்டு கூறும் மொழிகள் கௌஸல்யையின் துக்கத்தை அதிகரிக்கச் செய்கின்றன. ஸ்ரீராமனின் வனவாஸத்திற்குக் காரணமாக இருந்து, செயல்பட்டு வெற்றி கண்டுள்ள கைகேயியின் எல்லையற்ற சுதந்திர நிலையும், சந்தோஷமும், கௌஸல்யையின் மனத்தில் நிழலாட, அவற்றை வெளிப்படையாகக் கூறி அரற்றுகிறாள். உடனடியாக, ஸ்ரீராமனுக்கு வனத்தில் ஏற்படக் கூடிய துக்கங்களும் கஷ்டங்களும் அவளுடைய மனத்தை அரிக்கின்றன. அவன் எப்போது கஷ்டங்கள் தீர்ந்து சுகமே திரும்புவான், அது நடக்கக் கூடியது தானா என்பதை எண்ணி ஏக்கத்துடன் பலவாறு கௌஸல்யை பிதற்றுகிறாள்.

அந்தச் சூழ்நிலையில், சுமித்ரை தன்னுடைய துயர மத்தியில், அதனை அறவே நீக்கி, மிகவும் விவேகத்துடன் கௌஸல்யைக்குத் தேற்றரவான மொழிகளைக் கூறுகிறாள். அவை சமய சஞ்ஜீவியாக அமைகின்றன. சுமித்ரை கௌஸல்யைப் பார்த்து,

'மேன்மையானவளே! ஸ்ரீராமன் ஸத்வத்தின் சிகரமானவன்; புருஷோத்தமன். அவனைக் குறித்துப் புலம்புவது பயனற்றச் செயலாகும். ஸத்ய ஸந்தரான தசரதரை மேலும் உயர்த்தவும்,(பிதுர்வாக்யபரிபாலன) தர்மத்தை நிலை நாட்டவும் ஸ்ரீராமன் வனத்திற்குச் சென்றுள்ளான். அவன் எல்லா விஷயங்களையும் நன்குணர்ந்த ச்ரேஷ்டன். அவன் விஷயமாக துக்கிக்கக் கூடாது. மேலும் மிக்க தைரியசாலியான இலக்ஷ்மணன் கைங்கர்ய லக்ஷ்மியுடன் தொடர்ந்து செல்லும் போது கவலைக்கு இடமேது. சுகத்திற்கே ஏற்றவளான சீதையும் அவனுடைய சேவையையே எண்ணி உடன் செல்வதால் அவனுக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படாது. சூரிய சந்திரர்களும் மற்றும் பல தேவர்களும் ஸ்ரீராமனுக்கு அனுகூலத்தையே செய்வார்கள். ஸ்ரீராமன் ஈடு இணையற்ற சூரனல்லவா. நாடும் காடும் அவனுக்குச் சமமே. சீக்கிரத்தில் அவன் அயோத்திக்கு நலமாகத் திரும்புவது திண்ணம், கௌஸல்யே! அவன் சூரியனுக்கும் சூரியன்; அக்னிக்கு அக்நி; ப்ரபுவுக்கு ப்ரபு; செல்வத்திற்குச் செல்வன்; கீர்த்திக்குக் கீர்த்தி; பொறுமைக்குப் பொறுமை; ஸத்வங்கள் எல்லாவற்றிற்குள்ளும் (சிறந்த) ஸத்வன்; பூதங்கள் யாவற்றினும் மேம்பட்டவன். நாட்டிலாவது காட்டிலுமாவது அவனுக்கு யாரால் தீமை செய்ய முடியும். இப்போது துக்கப்படும் யாவரும் அவர்கள் சுகமே திரும்பி வந்து சீதாராம பட்டாபிஷேகத்தைக் கண்டுகளிக்கப் போவது உறுதி. கைங்கர்ய லக்ஷ்மியுடன் இலக்ஷ்மணனும், ராஜ்யலக்ஷ்மியுடன் சீதையும் தொடர்ந்து செல்வதால், சீக்கிரத்திலேயே தாங்கள் அவர்களை நலமே திரும்பக் கண்டு ஆனந்தக் கண்ணீரைச் சொரிவீர்கள். இது திண்ணம்" என்று பலவாறு கூறியதைக் கேட்டதும் கௌஸல்யை துக்க நிவர்த்தி அடைவதாக வால்மீகி விவரிப்பதன் மூலம் சுமித்ரையின் உன்னதமான விவேகத்தைப் பறை சாற்றி இருக்கிறார்.

வால்மீகியைப் பின்பற்றும் கம்பன், சுமித்ரையின் விவேகத்தைச்

சித்தரிக்கும் சந்தர்ப்பத்தில் ஆதிகவியையும் விஞ்சியுள்ளார் என்பது மிகையாகாது.

வனத்திற்குப் புறப்படும் முன்னர், ஸ்ரீராமனும் இலக்ஷ்மணனும் சுமித்ரையின் இல்லத்தை அடைகின்றனர். சுமித்ரை துககத்துடன் ஓலமிடும் தருணம் கைகேயியின் சேடிகள் அங்கு வந்து இராமலக்ஷ்மணர்கள் அணிவதற்காக மரவுரிகளைக் கொடுக்கின்றனர். மரவுரியை இலக்ஷ்மணன் ஆதரத்துடன் பெற்றுக் கொண்டு, தாயை நோக்கி, 'இன்று இடர் தீர்ந்து உடன் ஏகுகென,எம்பிராட்டி சொன்னலதுவே துணையாம்' என்று கூறித் தாயின் திருவடிகளில் பணிகிறுன். கண்களில் நீர் சோர நிற்கும் சுமித்ரை, 'ஆகாததன்ருல் உனக்கு அவ்வனம் இவ்வயோத்தி; மாகாதலி இராமன் அம்மன்னவன் வையமீந்தும்; ஏகா உயிர்த் தாயர் நம்பூங் குழற் சீதை என்றே; ஏகாய் இனி இவையின் நிற்றலும் ஏதம்' என்று சித்தரித்துள்ளதையும், அதைத் தொடர்ந்து, 'பின்னும் பகர்வாள் மகனே இவன் பின் செல் தம்பி, என்னும் படியன்று; அடியாரினில் ஏவல் செய்தி,மன்னும் நகர்க்கே இவன் வந்திடில் வா அதன்றேல், முன்னம் முடி என்ருள் வார் விழிசோர நின்ருள்.' என்னும் சொற்களையும் காணும் போது, ஸ்ரீராமன் புறப்பட்டு விட்டபடியால், ஒரு நிமிஷம் அங்கு இலக்ஷ்மணன் தங்குவதும் குற்றமென்றும், வனத்தில் ஸ்ரீராமனுக்கு ஏதாவது தீங்கு ஏற்படும் சூழ்நிலை உண்டானல் இலக்ஷ்மணன் தன்னுயிரை முன்னதாகத் தியாகம் செயயத் தயாராக இருக்க வேண்டும் என்றும் கூறியுள்ள மொழிகள் கம்பன் வால்மீகியை மிஞ்சியுள்ளார் என்பதை உணர்த்துகின்றன.

கோஸ்வாமி துளசிதாஸர், சுமித்ரையின் விவேகத்தைத் தனக்கே உரித்தான வகையில் மிகவும் உன்னதமாகச் சித்தரித்திருக்கிருர். சுமித்ரையினிடம் விவரங்களைத் தெரிவித்து விடை பெற்று வருமாறு கூறி ஸ்ரீராமன் இலக்ஷ்மணனை அனுப்புகிருர். இலக்ஷ்மணன் கூறும் விஷயங்களைக் கேட்டதும் சுமித்ரை, காட்டுத்தீயின் மத்தியிலகப்பட்டப் பெண் மானைப் போலத் துடிக்கிருள். இந்த நிலையைக் காணும்இலக்ஷ்மணனுக்குத் தாயின் அனுமதி கிடைக்காதோ என்ற பயம் ஏற்படுகிறது. ஆகவே, சுமித்ரையின் சஞ்சலத்தை மாற்றி நல்லமுறையில் தனக்கு அவள் ஆசீர்வதித்து அனுப்புவதற்கும் ஸ்ரீராமனின் திருவடிகளே துணையாக இருக்க வேண்டுமென்று இலக்ஷ்மணன் மானஸீகமாக ப்ரார்த்திக்கிருர்.

இயற்கையாகவே நல்லறிவைப் பெற்றவளான சுமித்ரை, கைகேயியின் சதியைக் குறித்து ஏக்கத்துடன் அழுவதற்கு அது தருணமல்லவென்பதை உணர்ந்து, அறிவினல் இந்திரியங்களை ஜயித்து அடக்கி, பற்றுதலற்ற மனத்துடன், தியாக புத்தியை அடைவதாகவும், தன் ஆசை மகனைச் சீதாராம கைங்கர்யத்திற்காகவே பெற்றெடுத்ததாக நினைத்து அவ்வாறே தீர்மானித்து விடுவதாகவும் துளசிதாஸர் கூறுகிருர். அவ்வாறுன மனமாற்றத்திற்கு அவளுடைய பாக்ய விசேஷமே காரணம் என்று விவரித்து, அவள் இலக்ஷ்மணனைப் பார்த்து, "என் மைந்தா, உன் தாயார் வைதேஹி, நானல்ல; தசரதர் உன்பிதா வல்ல; சாக்ஷாத் பரப்ருஹ்மமான ஸ்ரீமந் நாராயணனின் அம்சமான ஸ்ரீராமன் உன் தகப்பனுர்; அவன் எங்கு வசிக்கிருனே, அதுவே உனக்கு அயோத்தி; ஸ்ரீராமனுகிய திவாகரன் உதயமாகிற இடமே உன் மன இருளைப் போக்கும் சூரியனுகவும் பகலாகவும் இருக்கும்.

தேவர்க்கும் தேவனுகும், உனக்குச் சகலமாகவும், எனக்கு ப்ரபுவாகவும் இருக்கும் சீதாராமனை, அருமை மகனே நீ மாதா, பிதா, குரு, பந்து, ஸ்வாமி, தேவதை, ஸ்வாமியாகிற எஜமானன் என்கிற பல பாவங்களில் பஜித்து பூஜித்து அவர்களிருவருக்கும் வனத்தில் சேவை செய்வாயாக". என்றும் கூறி, சீதாராம கைங்கர்யத்தை இலக்ஷ்மணன் செய்யப் போவதால் சூரிய குலத்தோர் எல்லோருமே கரையேற்றப்படுவார்கள் என்று கூறியதாகவும் துளசிதாஸர் சித்தரித்திருக்கிருர்.

ஸ்ரீராம பக்தியிலேயே ஊறியிருப்பவரும் அந்த பக்தியைப் பல வகையாகப் பரவச் செய்தவதிலேயே ஊக்கமுள்ளவரான துளசிதாஸர், சுமித்ரைக்கு விவேகம் ஏற்பட்ட பிறகு அவளடைந்த உன்னதமான ஸ்ரீராம பக்தியை மேலும் விளக்குகிருர். சுமித்ரை இலக்ஷ்மணனைப் பார்த்து, 'ரகுபதியினிடம் பக்தி வைக்காத புத்ரனும் புத்ரனல்ல; அப்படிப்பட்ட புத்ரனைச் சுமந்து பெறும் தாய் ஒரு அபாக்யவதி; அதைவிட மலடியாக இருப்பதே மேலானது; நான் அவ்வாறு இல்லாமல், சீதாராமர் சேவையைச் செய்யப் பெற்ற மகனைப் பெற்றுள்ளது என்னுடைய பாக்ய விசேஷமேயாகும்" என்று பெருமையாகக் கூறுவதாகவும், திரும்பத் திரும்ப பலபடியாக இலக்ஷ்மணனுக்கு உபதேசம் செய்து சிக்ஷையாகிற ஆக்ஞையை இட்டு,அவனை வனம் செல்லும்படி தூண்டியதாகவும், பரம பாகவதனுன இலக்ஷ்மணன் தனது ஸுக்ருத விசேஷத்தை நினைத்து மகிழ்ந்து, தாயாரின் திருவடிகளைப் பற்றிக் கொண்டு நமஸ்கரித்துவிட்டு, இந்த தெய்வ காரியத்திற்கு வேறு எவ்விதமான இடையூறும் ஏற்படாமல் இருக்க வேண்டுமே என்று பிரார்த்தித்துக் கொண்டு அவ்விடத்தைவிட்டுச் செல்லும்போது ஒரு பெரிய இடையூறைத் தாண்டியதாக எண்ணிச் சென்றதாகவும் துளசிதாஸர் விவரித்திருக்கிருர். மந்தோதரியின் விவேகச் சிறப்பை பிறிதொரு கட்டுரையில் காண்போம்.

## மதிப்புரை . . . .

# இறை மனிதர் சிவானந்தா

*ஆசிரியர்: நா. அனந்த நாரா யணன்; வெளியீட்டாளர்: ஆசிரியர், 103, பெரியார் வீதி, ஈரோடு-638001; பக்கங்கள் viii+327; முதற் பதிப்பு: பிப்ரவரி, 1986; விலை: ரூ. 40.*

மருத்துவர் குப்புசாமி மகான் சிவானந்தராக மாறியது நம் காலத்தில் நிகழ்ந்தது. இந்திய ஆன்மீக மலர்ச்சியின் தொடர்ச்சிக்குத் தெள்ளிய தோர் எடுத்துக் காட்டாகத் திகழ்வதாகும். தமிழகத்தில் பிறந்து, படித்து, மலேயா நாட்டு ரப்பர்த் தோட்டங்களில் டாக்டராகப் பணியாற்றி, பின்னர் இமயம் சென்று, சொந்த முயற்சியினால் தம்மை ஒரு இறை மனிதரின் நிலைக்கு உயர்த்திக் கொண்ட ஒரு மனிதரின் கதை அது.

இறை மனிதர் சிவானந்தரின் வாழ்க்கை வரலாற்றினை விரிவாகவும் விவரங்கள் நிறைந்ததாகவும், எளிய, ஆனால் நேரடியான அழகுத் தமிழில் எழுதி, ஆசிரியர் நா. அனந்த நாராயணன் நிகழ்காலச் சமய இலக்கிய வளர்ச்சிக்கு வளமூட்டியுள்ளார் என்பது மிகைக்கூற்றே ஆகாது. பதினைந்து அத்தியாயங்களில் சிவானந்தரின் பிறப்பு முதல் சமாதி வரை விரிவான வாழ்க்கை விவரங்களுடன் விளங்கும் இந்நூல், இந்நூலாசிரியராலேயே 1970-இல் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட 'ஃப்ரம் மேன் டு காட்மேன்" (From Man to godman) என்பதன், அவராலேயே செய்யப்பட்ட மொழி பெயர்ப்பு. சிவானந்தரின் நூற்றாண்டு விழாவின்போது இது வெளியானது சாலப் பொருத்தமே ஆகும்.

துவக்க காலத்தில் நாகரிக மக்களிடையே பணியாற்றியதனால், அவர்களின் பிரச்சனைகள், பலவீனங்கள் மற்றும் மனக்குழப்பங்கள் ஆகியவற்றை அவர் நன்கு உணர்ந்திருந்தார். எனவே, தனி மனிதர்களின் இடர்களைக் களைந்து, பண்டைய நெறி மிகுந்த வாழ்க்கை முறையின் மேன்மையினை எடுத்துக்காட்டி, அவர்களுக்கு மனத்தெளிவை அளித்து, அவர்களது வாழ்க்கை இன்பமானதாகவும், பயனுள்ளதாகவும் இறைத் தன்மையில் ஆழங்காற்படும்படியும் செய்தது சிவானந்தரை ஏனைய துறவிகளிடமிருந்து இனம் பிரித்துக் காட்டிற்று.

கி. பி. பதினாறும் நூற்றாண்டில் புலமை மிக்கவராகவும் ஞானியாகவும் வாழ்ந்த அப்பைய தீட்சிதரின் பரம்பரையில் வந்தவரான சிவானந்தர், கடவுளையும் சமயத்தையும் பற்றிய பழைய மூடநம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்து, தமது அறிவுரைகளினாலும் சொந்த நடைமுறை எடுத்துக் காட்டினாலும், மோட்சத்திற்கு எளிமையான வழி என்று எதுவும் கிடையாது என்றும், கடினமான தொன்று தொட்ட வழி ஒன்றே என்றும், சேவையினாலும் அன்பினாலும் புலனடக்கத்தினாலும் தியானத்தினாலும் ஆகியதே அது என்பதைத் தெளிவு படுத்தினார்.

"தன்னை உணர்தலுக்குத் தன்னை இழத்தல் அவசியம்" (பக். 107) மற்றும் 'சேவை செய், அன்பு செய், அநுபூதி அடை' (பக். 317) என்பவையே அவருடைய உபதேசங்களின் சாரமாகும். 'அகந்தையை அறுக்கத் தன்னலமற்றச் சேவையே தக்க ஆயுதமாகும்' (பக். 8), 'மருந்துடன் கடவுள் பிரசாதமும் சேரும் போது நோயாளிகள் வியக்கத் தக்க வகையில் நலமடைந்தனர்' (பக். 11), துறவு நிலையிலும் நோயினால் வருந்துவோர்க்குத் தமது மருத்துவ அறிவின் துணை கொண்டு சிகிச்சை புரிதல் (பக். 36), கடினமான தவ வாழ்க்கை வாழ்ந்த அவரது அறிவுரைகளைக் கேட்டுப் பலர் பேருண்மையை அறிந்து கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டது, இறைவனின் திருநாமங்களை இடைவிடாது சங்கீர்த்தனம் செய்வது ஆகியவை குறித்த விவரங்கள் நம் உள்ளத்தை நெகிழ வைப்பனவாய் அமைந்துள்ளன.

ரிஷி கேசத்தில் 'ஆனந்த குடீரம்' நிறுவி ஆசிரமம் அமைத்துக் கொண்டதுகூட, 'தெய்வீக வாழ்க்கைச் சங்கம்' அமைத்து, மக்களை, சிறப்பாக, இளைஞர்களைத் தெய்வ நெறியின் பால் பற்றுக் கொள்ளச் செய்வதற்கான நிறுவனத்திற்குத் தனி இடம் ஒன்று வேண்டும் என்பதற்காகத்தான். உடல் நலத்தைப் பேணுவதன் அவசியத்தையும் அவர் பெரிதும் வலியுறுத்தினார்.

ஆன்மீக அறிவினைப் பரப்புவதையும் அதற்காகச் சீடர்களை உருவாக்குவதையும் அவர் நிரம்பத் தீர்க்க தரிசனத்துடன் மேற்கொண்டார். சீடர்களின் மெய்யான ஐயங்களுக்கு விளக்கமளித்து அவர்களின் இறையன்பினை வளர்த்தார். ஆன்மீக அறிவைப் பரப்புவதில் சிவானந்தர், கடிதம், பத்திரிகை, நூல், ஒலிப் பதிவு நாடா என்று எல்லா சாதனங்களையுமே பயன்படுத்தினார். அனைத்து மக்களிடையிலும் தமது ஆன்மீகக் கருத்துக்கள் பரவ வேண்டும் என்பதொன்றே அவர் குறிக்கோள். நமது இந்துமத அடிப்படை நூல்களான வேதங்கள், உபநிஷதங்கள்,

# தீப ஒளியில் திருமாலைக் காண்

அங்கு இங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் இறைவன். பின் காண முடியவில்லையே! எப்படிக் காண முடியும்? அஞ்ஞானமாகிய இருளில் நாமும் மூழ்கி மற்றவர்களையும் மூழ்கடித்துக் கொண்டிருக்கிறோம். எனவே, எங்கும் வியாபித்துள்ள பரம்பொருளை உணர முடியவில்லை.

வைணவத்தில் பன்னிரண்டு ஆழ்வார்கள் ஸ்ரீமந் நாராயணனுடைய திவ்விய தரிசனத்தைக் கண்டு பேரானந்தம் பெற்றனர். அவர்களுள் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய முதலாழ்வார்களாகிய மூவரும் சந்தித்த நிகழ்ச்சியை நினைத்தால் அவர்கள் இறைவனைக் கண்ட விதத்தை அறியலாம்.

திருக்கோவலூரில் இரவு நேரத்தில் ஒரு திண்ணையில் பொய்கையாழ்வார் படுத்திருந்தார். மழை வந்தது இருள் சூழ்ந்தது. பூதத்தாழ்வார் அங்கு வந்தார். "ஐயா! தங்குவதற்கு இடம் இருக்குமா?" என்று கேட்டார். திண்ணையில் படுத்திருந்த பொய்கையாழ்வார் எழுந்து, "ஐயா ஒருவர் படுக்கலாம். இருவர் இருக்கலாம். தாங்களும் அமருங்கள்" என்று கூறி வந்தவருக்கு இடமளித்தார். சிறிது நேரத்தில் பேயாழ்வார் அங்கு வந்தார். அவரும் இரண்டாமவரைப் போலவே, "ஐயா! இத்திண்ணையில் இருவர் இருக்கலாம். மூவரானால் நிற்கலாம்" என்று கூறி மூவரும் நின்றனர். இருள் சூழ்ந்தது. மூவரையும் நான்காமவர் ஒருவர் வந்து நெருக்குவது போன்ற உணர்வு ஏற்பட்டது. ஐம்புல உணர்வுகளுள் மெய்யுணர்வினால் நான்காமவர் யார் என்பதை அறிய இயலவில்லை. எனவே, இருளைப் போக்கி ஒளியுண்டாக்கினால் நான்காமவர் யார் என்பதை அறியலாம் என எண்ணினர்.

"வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று"

என்று முதலாழ்வாராகிய பொய்கையாழ்வார் இவ்வுலகை விளக்காகவும், கடல் நீரே எரிப்பதற்குரிய நெய்யாகவும், கதிரவனின் ஒளியே விளக்கொளியாகவும் சொல் மாலையால் இருள் நீக்கப் பாடினார். இரண்டாம் ஆழ்வாராகிய பூதத்தாழ்வார் அன்பையே விளக்காகவும், இறைவனைக் காணக்கூடிய ஆர்வத்தை நெய்யாகவும், இறைவன்பால் உருகுகின்ற சிந்தையே திரியாகவும், அஞ்ஞானமாகிய இருளைப் போக்கி ஞானமாகிய சுடர் விளக்கை ஏற்றினார். அவருடைய முதல் பாடல்:

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்."

என்று பாடியவுடன் ஒரு பெருஞ் சோதியாகி விண்ணையும், மண்ணையும் அளந்த ஓங்கி உலகளந்த பெருமானாகக் காட்சியளித்தார். விவரிக்க முடியாத இவ்வரிய திருக்காட்சியை மூன்றாமவராகிய பேயாழ்வார் திளைத்துப் பாடுகிறார்.

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்,
என்னாழி வண்ணன்பால் இன்று."

திரு. க. கருப்பையா எம்.ஏ., பி.எட்.,
*இராஜபாளையம்.*

திருமகள் திருமாலவனின் திருமார்பில் அமர்ந்திருக்கும் அந்தக் கோலக் காட்சியைக் காண்கிறார். மணிவண்ணனின் அணி நிறத்தையும் காண்கிறார். துஷ்டர்களை அழித்துப் பக்தர்களைக் காக்கும் பொன்னாழியைக் காண்கிறார். அருள்புரியும் சங்கம் கையில் உள்ளதைக் காண்கிறார். திருமாலுடைய திவ்வியத் திருக்காட்சியைக் காண்பதாகப் பாடுகிறார். நம்மையும் ஞானக்கண் கொண்டு காணும்படி பாடியுள்ளார். இவ்வாறு அஞ்ஞானமாகிய இருளைப் போக்கி ஞானமாகிய ஒளியை ஏற்றினால் திருமாலைக் காணலாம். தீப ஒளியில் திருமாலைத் தரிசித்துப் பிறவிப் பெருங் கடலை கடக்கலாம்.

---

புராணங்கள் முதலியவற்றுக்கு, சாமானிய மக்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில், சிவானந்தர் விளக்கவுரைகள் எழுதி வெளியிட்டார்.

உலக அமைதி என்பது மனிதனைப் பற்றிய மெய் ஞானத்திலின்றே கிடைப்பது. எனவே, எல்லா உயிர்களையும் ஒரே மாதிரியாகவே நேசிக்க வேண்டும் என்னும் இவரது கருத்து மேனாட்டவர் பலரையும்கூடக் கவர்ந்ததோடு அல்லாமல், அவர்களில் பலர் அவருடைய ஆசிரமத்திற்கு வந்து வாழவும் வகை செய்தது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

பொது மக்கள் முன்னிலையில் இயற்கைக்குப் புறம்பான சக்திகளை சிவானந்தர் ஒரு பொழுதும் கண் காட்சியாகக் காண்பிக்கவில்லை எனினும், அவருடைய சித்து விளையாடல்களுக்கு எடுத்துக் காட்டுகளாக, இந்நாட்டிலும் பிறநாடுகளிலும் எத்தனையோ நிகழ்ச்சிகளைச் சுட்டிக் காட்ட முடியும்.

சிவானந்தாவின் கதை, மனிதனுள் உறையும் கடவுளின் கதை, ஆன்மீக மலர்ச்சியின் கதை, சீவாத்ம பரமாத்மாவை நோக்கி நடைபோடுவதன் கதை'

நூலின் அச்சும் அமைப்பும் முதல் தரம். மலிவுப் பதிப்பாக வெளியிட்டால் மேலும் பல வாசகர்கள் பயனுறுவர். நூலில் பல இடங்களில் 'ஹத யோகம்' என்று காணப்படுவது 'ஹடயோகம்' என்றிருக்க வேண்டும்.

அ. நடராஜன்-திருப்பதி.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

